# காந்தி பிள்ளைத் தமிழ்



மூன்றாம் பதிப்பு.

(காபிரைட்) விலை அணா கூ.

ராய. சொக்கலிங்கன்.

# பதிப்புரை.

தமிழ்ப் பெரு மக்களே!

காந்தியடிகள் மீது முதல் முதல் நான் பாடியது இக் காந்திபிள்ளைத் தமிழ். இதன் இரண்டு பதிப்புக்கள் செலவாகி விட்டன. இது மூன்றும் பதிப்பு. முதல் பதிப்பினின்றும் பாக்களில் சிற்சில திருத்தங்கள் செய்திருக்கிறேன். முந்திய பதிப்பைவிட இரண்டு மூன்றும் பதிப்புக்கள் திருந்திய முறையில் அச்சிடப்பெற்றிருக்கின்றன. எனது புதிய நூல்களோடு கோவையாகத் தமிழர் கரங்களில் இப்பிள்ளைத் தமிழும் விளங்குவதாக!

சென்னை,<br>யுவ-பங்குனி-௧௦௨

ஊழியன்,<br>ராய. சொக்கலிங்கன்.

# உள்ளுறை.



# முகவுரை

---

பேரன்புடைய சகோதரர்களே !

பிள்ளைத் தமிழ் முன்னோர் வகுத்த தமிழ்ப் பிரபந்தங்களில் ஒன்று என்பது தமிழறிஞர் அறிந்தது. பல்வேறு உருவில் மக்கள் பார்க்கும் இறைவனை அவ்வவர் கொண்ட வடிவத்தில் அமைத்துக் குழந்தையாக்கியும், அவனருள் பெற்ற பெரியார்களைக் குழவியாக்கியும் தமிழ் பாடி இன்புறும் கவி பிள்ளைக் கவி யெனப் பெயர் பெறுகிறது. அதற்கு நமது கன்னித் தண்டமிழ் நாட்டில், கடவுளர்கட்கும் பெரியார்கட்கும் பிள்ளைக் கவிகள் பலப்பல மலிந்து கிடத்தல் போதிய சான்றும். கவிகளு ளெல்லாம் பாடுதற்கு மிக இனிமை தருவது பிள்ளைக்கவி என்பது அநுபவத்திற் கண்ட உண்மை. அதனாலேயே, எளியேனை ஆட்கொண்ட எம்பெருமான் காந்திபடிகளார்க்கு, ஏழை, பிறந்த தமிழ் மொழியில் ஒரு பிரபந்தம் ஆக்கவேண்டு மென்ற நசை யெழ, அது பிள்ளைக் கவியாகவே பிறங்கவேண்டு மென்ற முடிவிற்கு வந்தேன். அன்றியும், சிறியேன் ஒரு புலவனல்லேன்; பிள்ளைத்தன்மை யுடையவனே யாதலின், பிள்ளைக்கவி பாடுதலே எற்குப் பொருத்த முடைத்து. யான் தமிழ் பாட வல்ல ஒரு தமிழ்ப் புலவன் அல்லேன் என்பதை என்னை யறிந்த எவர்க்கும் யான் கூறவேண்டுவ தின்று. யான் இக் கவி பாட முந்தியமைக்குக் காரணம் காந்தியடிகள் மீது கொண்ட காதலேயன்றிப் பிறிதன்று என்பது பலகாலும்

சாதம். எனவே, ஏழை கவியில் பிழை பல மலிந்து கிடக்கு மென்பது தேற்றம். அவற்றைப் பொறுத்தருளி, இத்தமிழ் எழுந்தது உலகம் போற்றும் ஒருவன் மேல் என்பதை நன்றாக உளங்கொண்டு மகிழ வேண்டுவதே உயர் தமிழ்வாணர் கடன்.

பண்டு பிறந்தருளிய பல பெரியார்க்குத் தமிழ்நாட்டில் புராணங்களும் பிரபந்தங்களும் பற்பல இருக்கின்றன. என்றாலும், அப்பிரபந்தத்திற்குரிய பெரியார் இப்பூவுலகில் உலவுங் காலத்திலேயே அவைகள் ஆக்கப்பெற்றனவா என்று ஆராயின், சிறியேன் அறிந்தவரை இல்லை யென்றே எண்ணுகின்றேன். எனது தமிழ்க்குரிய இப்பெரியாரிற் பெரியார்க்கு, இவர் ஈண்டுலவும் இற்றை நாளிலேயே புராணம் எழுந்துவிட்டது; பிள்ளைக்கவியும் பிறந்து விட்டது. எனவே, இப்பெரியார் பெருமையைப் பற்றிப் பேசவே வேண்டுவதின்று. அன்றி, அடிகள் பெருமையை முற்றும் பேசும் ஆற்றல் அடியேனுக்குச் சிறிதுமில்லை யென்பதும் ஒருதலை. நிற்க,

இப்பிள்ளைத் தமிழில் முதற் பருவமாகிய காப்புப் பருவத்தை, பண்டு பல்லோர் கொண்ட முறை விடுத்துப் புதிய முறையில் ஆக்கியிருப்பது, இந்து மதத்தின்பாற் பட்டாரே யன்றி, அடிகளைத் தம் குருவாகக் கொள்ளும் எனைத் தமிழரும் அடிகள் புகழை அன்புடன் பாடி மகிழவேண்டு மென்ற பெரு நோக்காலேயே. ஆகலின், விரிந்த நோக்குடை, எவ்வறிஞரும் இப்புதிய துறையை வெறுக்கார் என்று உறுதியாக நம்புகிறேன். அல்லாமலும் ஒரு சமயச் சார்பு பற்றிய இறைவனின் ஒரு பெயரைப் பாடுதலைக் காட்டினும் அவ்

விறைவனின் குணஞ் செயல்களையே கூறிச் செல்லுதல் சிறப்புடைத் தென்றே நடுநிலையாளர் கொள்வர். திருக் குறள் அருளிய புலவர் பெருமான் அவ்வாறே அருளியிருத்தல் காண்க.

தமிழ் நாட்டின் இற்றைநாள் நிலை நோக்கியே இப் பிள்ளைக் கவியில் கடும் பதங்களைப் பெய்யாமல் சிறியேனல் இயன்றவரையும் சீர்தூக்கி எளிய மொழிகளாலேயே இத் தமிழைப் புனைந்திருக்கின்றேன். எனவே, இன்றைத் தமிழர் எல்லோர்க்கும் இந்நூல் பயன்படுமென்றே கருது கின்றேன். எளிய பதங்களையே இத்தமிழ் கொண்டிருத் தலால் அரும்பதவுரைகூட வேண்டாமென்றே எண்ணி விடுத்தேன். ஒரோவிடத்துச் சில சொல் அரிதாக அன்பர் கட்குத் தோன்றுமானல் அவர்கள் மன்னிப்பாராக. பெரும் புலவோர் சாதாரணமாக எண்ணித் தள்ளிவிடாது அடிகளை எண்ணி ஏற்பாராக.

இத்தமிழுக்குப் பிறரிடம் முகவுரை வாங்க வேண்டா மென எண்ணி அடியேனே வரைந்து விட்டேன். அது எனது ஆணவத்தானும் பிறவானும் அன்று. சிறியேன் முன்னுரை கேட்டால், என் தமிழ் எவ்வாறிருப்பினும், நூலுடைப் பெரியோனை எண்ணி, தமிழ்நாட்டில் எவ் வெவர் பெரியாராகக் கொள்ளப் படுகின்றாரோ அவ்வவ ரனைவரும் தந்தருளுவார் என்பதைச் சிறியேன் நன்கு அறி வேன். ஆனல், முகவுரை பிறரிடம் கேட்டுப் பெற்று மகி ழும் முறை தள்ளத்தக்க ஒன்று என்பது ஏழை எண்ணம். என்? நூல் பாடும் ஒருவர் அதனைப் பிறரிடம் கொடுத்து இதைப்பற்றி நீங்கள் நல்லுரை வழங்க வேண்டுமென்று

கேட்டு வாங்கித் தம்மைப் பற்றி அவர்கள் கூறும் உரைகளை யும் சேர்த்து அச்சாக்கி வெளிப்படுத்தல் சரியன்று. ஆத லின், ஏழை கொண்ட இப்புல்லிய எண்ணங் காரணமாகவே அம்முறையை விடுத்தேன். இது கொண்டு அம்முறை கொள்ளும் அன்பர்கள் என்னைக் காயாதிருப்பாராக. அவர் களை இழிவுபடுத்த வேண்டுமென்ற எண்ணத்தால் யான் இவ்வாறு செய்யவில்லை யென்பது உறுதி. அம்முறை கொள் ளத்தக்கதா தள்ளத்தக்கதா என்பதை அறிஞர்கள் ஆராய் வாராக.

இவ்வளவோடு சிறியேன் உரைகளை முடிக்கின்றேன் பிழைபொறுத்தல் பெரியோர் கடன்.

யாவும் நன்றேயாக.

காரைக்குடி,
இரக், மார்கழி அ-உ

ஊழியன்,
ராய. சொக்கலிங்கன்.

## பாயிரம்

---

நூலாசிரியன் பாடியவை

பேர்படைத்த இவ்வுலகில் எவன்பெரியோன்
எனஎங்கும் பெரிதும் ஆய்ந்து
சீர்படைத்த தன்மையினுல் தெரிந்தெடுக்கப்
பெற்றஉயர் திருவார் செல்வன்
பார்படைத்த நற்றவன்பூ நலம்படைக்கப்
பிறந்தருளும் நல்லோன் ஞானி
கார்படைத்த காதலத்துக் கஸ்தூரி
காதலெழில் கணவன் காந்தி. க

செயல்கண்டும் அவனெழுகும் நெறிகண்டும்
அப்பெரியோன் சிந்தை கண்டும்
மயல்கொண்ட இவ்வுலக வாழ்வைமதி
யாதன்னுன் வாய்மை கொள்ளப்
புயல்கண்டு மனமகிழ எதிர்நோக்கும்
மயிலேபோல் பொழுது பார்க்கும்
செயல்கொண்டார் எண்ணற்றுர் இப்புதுமை
உலகின்று தெரிகின் றேமால். உ

இன்னபுகழ் செய்கைகுணம் இனிதுடையான்
எவ்வுலகும் இன்றும் அன்றும்
நன்னர்நிரல் ஆய்ந்திடினும் என்றுமிலை
நம்பிபொரு நல்லோன் என்று
மன்னுமுயர் அறிஞரெலாம் மனமகிழ்ந்து
பெருமிதமாய் வாய்ம ணக்கச்
சொன்னமொழி ஆயிரமா யிரமென்றால்
அவன்தூய்மை சொல்லல் ஆமோ! ௩

அப்பெரியோன் அடிமுடியில் அணிந்துவகை
யோடன்னான் அறத்தை ஆற்றிச்
செப்பரிய துன்பமடை திறமையுளார்
பலமக்கள் செயலொன் றின்றி
மைப்படிந்தோன் ஆனாலும் அவன்புகழை
வாயார வாழ்த்து வானேல்
ஒப்பரிய உயர்பதத்தை உறுவனெனும்
ஓரெண்ணம் உள்ளங் கொண்டும், ௪

பாருள்ள மொழியிலெல்லாம் சிறந்தமொழி
என்றுமொழி பலவும் கண்ட
சீருள்ள பெரும்புலவோர் செப்பியதீந்
தமிழ்மொழிதேர் திருநா டுற்ற
நாருள்ள மக்களெலாம் நற்றவத்தோன்
புகழ்தமிழில் நயந்து பாட
ஏருள்ள இனியதமிழ் எம்பெருமான்
புகழ்தாங்கி இன்னும் ஓங்க, ௫

வேண்டுமெனும் நசைகொண்டும் மெய்யன்றி
        வேறறியா விமலன் ஆன
ஆண்டலகைவர்க் காந்தியெனும் அண்ணலவன்
        திருப்புகழை அறத்தா ருக
மூண்டபெருங் காதலொடு முன்மொழிந்த
        தமிழறிஞர் முறைகயைப் பற்றிக்
காண்டகுசீர் உடையான்மேல் காந்திபிள்ளைக்
        கவியெனுமிக் கவினூர் நூலை,        ௬

ஏாரும் வளப்பாண்டி மண்டலத்தில்
        இயற்கைவளம் இனிதின் ஈண்டிச்
சீாரும் மலையருவி தினம்வீழும்
        சீதளமார் திருக்குற் றாலக்
காாரும் பதிதன்னில் காற்றருவி
        யொடுபருவ காலம் துய்த்து
நாாரும் உயிர்க்கினிய நண்பரொடு
        வாழ்ந்த உயர் நன்னாள் தன்னில்,        ௭

எய்துசகம் ஆயிரத்தெண் ணூற்றுநாற்
        பத்தேழாம் எழிலார் ஆண்டில்
செய்யஇராத் தாட்சிதனில் சோாடி
        தனிவிறைவன் அருளே கூட்ட
மெய்யறங்கள் மிகமலிந்து மேன்மையொடு
        விளங்குதமிழ் விருத்தப் பாவால்
செய்தவன்சீர்க் காரைநகர் ராயசொக்க
        லிங்கனெனும் சிறியோன் அம்மா!        ௮

# அவையடக்கம்

கற்றுணர்ந்த பல்பெரிய கவிவாணர்
வாழ்ந்திடுமிக் கவினுர் நாட்டில்
முற்றறிவு படைத்தமுனி முனிவறியா
மேதகவோன் மொழிபொய் யாதான்
நற்றவன்சீர்க் காந்தியெனும் நல்லோனின்
புகழ்பாட நயந்த இந்தச்
சிற்றறிஞன் செயல்கண்டு சிரித்திடுமிவ்
வுலகமெனும் திறங்கொள் ளாமல்,  க

தமிழ்பாட எழுந்தனன தறியாமை
தனைப்பொருளாத் தாங்கி யீதை
உமிழாமல் உத்தமன்பேர் ஓங்குபுகழ்
கொண்டதெனும் ஒன்று கொண்டே
அமிழ்தான உரைபகரும் அண்ணலவன்
தனையுளத்தில் அழுந்த எற்றுத்
தமிழ்வாணர் பொறுத்தருளல் சாலுமெனச்
சாற்றிடவும் வேண்டுங் கொல்லோ.  உ



# காந்தி பிள்ளைத் தமிழ்

காப்பு.

சாந்தம் பொறைகருணை தண்மை புனிதநிறை
காந்திக்குப் பிள்ளைக் கவிபுகல—மாந்தர்
நினைத்தவடி வோடெவர்க்கும் நேர்ந்தவா ஈயுந்
தனித்தபொருள் தாளே சரண்.

காப்புப் பருவம்.

நீபடைத்த உயிர்காத்தல் நின்னியல்பே !
அதினுமுயர் நெறியே பற்றி
நேர்மைதனில் எட்டுணையும் நீங்காமல்
அறம்வளர்க்கும் நேயம் மிக்க
தாய்படைத்த உயிரனைத்தும் தனிபுரக்கும்
தண்ணளியைத் தரும வாழ்வைச்
சாந்தநிறை பெருங்கடலைச் சத்தியத்தின்
தனியுருவைச் சமம்வே றில்லா

ஆய்படைத்த அருமணியை அருட்காந்திப்
பெருமானை அடைவே காத்தல்
ஐயமில்லை; ஆனாலும் என்னாசை
யாலுரைத்தேன் ஐயனைக்காத் தருள்கவே!
பூபடைத்து விண்படைத்துப் புங்கமுறும்
எரிபடைத்துப் பொருகாற் றோடு
புனல்படைத்துப் பிறபொருளெ லாம்படைத்துப்
புரக்கின்ற புனித மூர்த்தி! ௧

புகழ்சேர்சுக் கிலவாண்டுப் புரட்டாதித்
திங்கள்பதி னெட்டாம் நாளில்
புண்ணியநந் திருநாட்டைப் பிடித்தசனி
யகன்றேடச் சனிவா ரத்தில்
மகிழ்கூர மக்களெலாம் மகம்வந்த
பெரியோனை மகித லத்தில்
மற்றொருவர் ஒப்பில்லா மாண்டகுணம்
வாய்ந்தானை வள்ளல் தன்னை
இகழ்செய்கை எள்ளளவும் இல்லானை
என்னெளிய இதயந் தன்னில்
என்றுமுள எம்மானை எழிற்காந்திப்
பெம்மானை இனிது காக்க!
செகமனைத்தும் ஆக்கியளித் தழித்துமறைத்
தருளைந்து செயலும் வல்ல
திண்மையனே சீலமுளார் திருமனத்தில்
தினமுறையுந் தேவ தேவே! ௨

அகழ்வாரைத் தாங்குகின்ற அம்புவிபோல்
அவமதிக்கும் அவர்ப் பொறுக்கும்
அறிவுடையார் தலையாயார் ஆவரென
அறமுரைத்தோன் அறைந்த வாபோல்
இகழ்வாரைப் பொறுத்தவர்க்கும் இன்மொழியால்
உய்யவழி இயம்பு மேலாம்
ஏழையரைத் தோழமைகொள் எங்காந்திப்
பெருமானை என்றுங் காக்க!
திகழுமுல குயிர்தொறுமவ் வுயிர்க்குயிராய்
உள்ளுறைந்து திண்மை கொண்டு
செய்கைமுழு வதுநடத்திச் சிக்கெனவே
பிடித்தவன்பர் சிந்தை நன்ருய்
நெகிழ்கூர என்றென்றும் அவருள்ளங்
குடிகொண்ட நேய வாழ்வே!
நித்தியமே! நின்மலமே! நிர்க்குணமே!
என்னிதயம் நிற்குங்கோவே! க

பூதலத்தில் அறம்பொலிய மறந்தொலையப்
பிறந்தருளும் புனிதன் புண்ய
பூமியெனும் பாரதநந் திருநாட்டிற்
போர்ப்பந்தர் பிறங்க வந்தோன்
சாதலற வேயறுத்தான் கலங்காதான்
கடமையே கருத்துட் கொண்டான்
கருணையே உருவான எம்பெருமான்
காந்திதனைக் காக்க! காக்க!

மாதலத்து வாழ்மக்கள் வீடடைய
வகுத்தசம யங்கட் கெல்லாம்
வழித்துணையாய் அண்டமெலாம் வகுத்துலகில்
வாழுமுயிர் ஆக்கிக் காத்துச்
சாதலுற வேயழித்துச் சங்கையறச்
சாற்றரிய விளையாட் டார்ந்து
சராசரமாய்ப் பிறபலவாய்த் தத்துவங்கள்
கடந்தபரம் பொருளாம் ஈசன்!

நின்மக்கள் தம்முள்ளே ஒருசாரார்
மற்றவரை நேய மோடு
நெருங்கியுற வாடாமல் நிகழ்பிறப்பின்
தன்மைகொடு நிந்தை கூறித்
தன்மநெறி சாராமல் சான்றாண்மை
நோக்காமல் சாதி தன்னில்
தாழ்ந்தவரே நீரென்னச் சாற்றுமநி
யாயத்தைச் சகிக்க லாற்றா
தன்னபிழை தனையகற்ற அகங்கொண்டா
வனபுரியும் அம்மான் ஐயன்
அருள்வடிவ மாயுதித்த அறக்காந்திப்
பெருமானை அன்பாற் காக்க!
பன்னரிய பல்லுலகும் பல்லுயிரும்
பல்பொருளும் பகலும் அல்லும்
பல்லுருவும் பல்பெயரும் பல்வேறு
சமயமுமாம் பரம நாத!

அமைச்சனெனை அவனிமுறை அரசாண்ட
அறந்திறம்பா அறிஞன் அந்நாள்
அரசற்கும் அஞ்சாத ஆற்றல்படைத்
துயர்ச்சிபெறும் அண்ண லான
சமர்த்தனுத் தமசந்த்ரன் மகன்மகனைத்
தந்தைதொழில் தன்னைத் தாங்கித்
தந்தையினுஞ் சதமடங்கு தநயனெனும்
புகழ்கொண்டம் மன்னன் தந்த
அமைப்புடைய பெருநிலத்தை அடையமறுத்
திட்டகாம் சந்த்ரன் ஈந்த
அருமகனைத் திருமகனை அவனிக்கே
ஒருமகனைக் காந்தி யென்னும்
எமைப்புரக்கும் பெருமகனை எல்லாமாய்
அல்லதுமாய் இணையில் லாத
இன்பமதாய்த் துன்பமதாய் இருந்திடுமோர்
இறையவனர் இனிது காக்க. ௬

மத்தெறிந்த தயிர்போல வல்லடிமை
வலியழிய மறங்கள் மாள
வந்தமகாத் மாவென்னும் மாதவனை
மணிவயிறு வாய்த்த மங்கை
நத்தியயல் நாடுசெலும் நன்மகற்கந்
நாட்டார்கொள் கள்ளுன் நங்கை
நசையிவற்றை நண்ணுது நல்லொழுக்கம்
நாட்டிவா நவின்ற நன்மைப்

புத்திரியாய் அருமந்த புத்திரனைக்
காந்திதனைப் புவிக்குத் தோன்றாப்
புகழ்த்துணையா விருந்தாட்டும் பொருளாகிப்
பழமையாய்ப் புதுமையாகிச்
சத்துவமாய்ப் பிறகுணமாய்க் குணங்கடந்த
தத்துவமாய் மறைதா னாகித்
தமிழாகி இசையாகிச் சமயங்கள்
ஆனபரன் சார்ந்து காக்க! எ

வள்ளுவர்சீர் மனைவியெனும் வாசுகிநேர்
மாண்கற்பு மடந்தை மாற்றம்
மறுத்துரைக்க மாட்டாதாள் வள்ளுவர்சொல்
மனைமாட்சி வாய்த்தமங்கை
எள்ளுகுணம் இறையுமிலாள் எழிற்கணவன்
இன்பதுன்பம் எல்லாம் ஏற்பாள்
இதயந்தான் இனையாமல் எந்நாளும்
ஏவல்செய்யும் ஏதம் இல்லாள்
கள்ளுலவு கருங்கூந்தற் கஸ்தூரி
காதலெழிற் கணவன் கார்நேர்
காந்தியெனும் கன்னியனைக் கடலாகிக்
கல்லாகிக் கருவாய்க் காலாய்த்
தள்ளரிய தரையாகித் தனிவிண்ணாய்த்
தழலாகித் தண்ணீர் தானாய்ச்
சான்றோர்கள் தம்மனத்தே சார்ந்துறையுந்
தனிப்பெரிய தலைவன் காக்க! அ

தகப்பனைப்பெற் றவர்களிலே தாணிமுழு
தீடில்லா தவரே என்னச்
சாற்றுமரி லால்மணிலால் சாருமிராம்
தாசோடு தந்தை சொன்ன
செகம்புகழும் தேவதாஸ் எனுமிவரின்
தந்தைதனைச் சீர்த்தி மிக்க
திருவணிகர் மாபென்றந் நாள்வகுத்த
குலத்துதித்துந் திருமால் சீலம்
அகங்கொண்ட அன்பர்களின் வழிவந்தும்
அவ்வளவோ டமைந்திடாமல்
அவனியுறை பெருமக்கள் அனைவருங்கொண்
டாடுசெயற் காந்தி தன்னை
அகரமுதல் எழுத்தாகி அவைசேர்ந்த
சொல்லாகி அச்சொல் தன்னல்
ஆனபொருள் முதலான அனைத்துமாம்
அண்ணலவன் அடைவே காக்க! க

வேறு.

தென்னப் பிரிக்கா எனுநாட்டிற்
சீல நிறையு மனைவியொடும்
சிறந்த மைந்தன் தன்னேடுஞ்
சிறைவாழ் வேற்றந் நியர்செய்த
இன்னு ஒன்றோ அம்மம்ம
எண்ணின் இதயம் ஊடுருவும்
எல்லாம் பொறுத்தின் செயல்புரியும்
எம்மான் காந்தி தனைப்புரக்க!

மன்னு அணுவுக் கணுவாகி
　　மலையிற் பெரிய மலையாகி
மண்ணும் விண்ணும் பாதலமும்
　　மதியும் ரவியும் தானுகித்
தன்னேர் இன்றி எல்லாமாய்த்
　　தாணி புகழ எங்குநிறை
தரும வடிவ மாய்த்திகழுந்
　　தண்மை மிக்க மழும்பொருளே! கO



# 2. செங்கீரைப் பருவம்

போர்ப்பக்தர் தனிற்பிறந்து புவனமெலாம்
புகழ்படைத்துப் பொறுமை யோடு
பொல்லாத மறங்கொன்று அறமோம்பிப்
பாந்தபெரும் பூமி முற்றும்
நார்ப்பக்தர் இட்டவற்றுள் நண்ணிடுவார்
தமைக்கூட்டி நண்ணு தாரால்
நலிவுபல வந்துறினும் நாட்டமதிற்
செலுத்தாது நன்றே நாடி
வார்ப்பந்த மக்கள்மனை மாண்பொருளை
வாந்துறந்து மக்கட் கெல்லாம்
மன்னறஞ்சத் யாக்கிரகம் மற்றபல
அறங்களெலாம் வகுத்துச் சொற்றுச்
சீர்ப்பந்த ஏர்வாடாச் சிறைவாழ்வே!
செங்கீரை யாடி யருளே!
செயற்கரிய செயல்வல்ல சேவகனே!
செங்கீரை யாடி யருளே! க.

திஞ்சாலி விளைபழனத் திருநாட்டின்
ஓர்பகுப்பாய்த் திகழும் பண்டு
திருமலிய வரசுபுரி திண்ணமுறு
பாண்டவர்சீர்ச் செல்வத் தேவி

பாஞ்சாலி யெனுமரிய பதிவிரதை
தனையீன்ற பண்பு மிக்க
பஞ்சநதம் பரவிநலம் படிக்கீயும்
பாங்கான பான்மை கொண்ட
பாஞ்சால மெனுநாட்டிற் பகாரிய
பாழான பாத கங்கள்
பலசெய்த வாசாங்கத் தொத்துழையா
மைபூண்டு பண்பால் அன்று
தேஞ்சாலும் மொழிபகர்ந்து சிறைமேயாய்!
செங்கீரை யாடி யருளே!
செயற்கரிய செயல்வல்ல சேவகனே!
செங்கீரை யாடி யருளே! உ

மந்திரியின் வழிவழியில் வந்துதித்தும்
அவ்வாழ்வை மதியா திந்த
மண்ணாசை முதலான மாயையெலாம்
ஒழித்திறைவன் வகுத்து னக்குத்
தந்தபெரும் பொருளையெலாந் தாரணியின்
வாழ்விற்கே தந்த செல்வா!
சத்தியமே கமழ்வாயுந் தண்ணளியே
சார்மனமுந் தாங்கும் ஐயா!
இந்திரிய வயப்பட்டே ஈடேற
வகையறியார்க் கினிய கூறி
எல்லோரும் உயர்நிலையை எய்தவுப
தேசமருள் எழிலார் எந்தாய்!

செந்தாள நந்தினுஞ் செய்நாட!
செங்கீரை யாடி யருளே!
செயற்கரிய செயல்வல்ல சேவகனே!
செங்கீரை யாடி யருளே! ௬

எல்லாமாய் அல்லதுமாய் எங்குநிறை
யிறைபடைப்பில் ஏற்றத் தாழ்வாம்
என்றுபல கற்பித்தே இவ்வுலகச்
செல்வத்தால் இறுமாப்புற்றுப்
பொல்லாத நெறிபற்றிப் புண்ணியமென்
பதைமறந்து புன்மை கொண்டு
புவிப்பொறையாத் திரிகின்றார் பலமக்கள்
வேறுபலர் புந்தி யின்றி
நில்லாத உடல்கொண்டு நான்பெரியன்
சாதியினில் நீகீழ் என்ன
நிலையறியா துழல்கின்றார் ஈதென்ன
உலகியற்கை என்ன மற்றோர்
செல்லாத பெருந்துறைசொல் சீராளா!
செங்கீரை யாடி யருளே!
செயற்கரிய செயல்வல்ல சேவகனே!
செங்கீரை யாடி யருளே! ௭

வேறு.

ஞாலம் பெறினும் நடுநிலை தவறு
நல்லோய்! நாயேனை
நஞ்சாம் உலகத் தீநெறி யதனுள்
நண்ணு தாட்கொண்ட

சில! அறத்தை வாயாற் கூவிச்
செய்கை மாறுபட்ட
சிறியோர் தமக்கும் வீண்பேச் சுரையீர்
செய்து காட்டுமென
எல வுரைத்தே யுயர்நெறி பற்றி
இருஞ்சிறை புக்கருளி
இன்னல் அனைத்தும் இன்பம் எனக்கொள்
எந்தாய் மோகனனே!
ஆலனை யார்க்கும் அருள்தரும் அமுதே!
ஆடுக செங்கீரை!
அருள்வடி வங்கொண் டவனியில் வந்தவ!
ஆடுக செங்கீரை! ௫

இருநில மதனில் இருந்துயிர் வாழ்தல்
விருந்திட என்றெவரும்
இணையிலை எனுமா றிசைபெறு புலவன்
எந்திரு வள்ளுவனன்
றுரைசெய் மொழியைச் சிரமிசை யேற்றே
ஒருபகலும் வீணு
ஒழியா துற்ற விருந்து புரந்து
வருவிருந் தெதிர்நோக்கும்
பெருமைகள் நிறையுந் திருமலி மக்கட்
பெற்றுயர் புகழ்கொண்ட
பேசின் ஞாலத் தெங்கா டும்நிகர்
பெறுமோ எனத்தக்க

அருமைகள் மிகமலி திருநா டுடையாய்!
ஆடுக செங்கீரை!
அருள்வடி வங்கொண் டவனியில் வந்தவ!
ஆடுக செங்கீரை! ௬

மாநில மதின்வரு மக்கள் பிறப்பின்
மாண்பயன் உணர்ந்தழியா
மன்பெரு வீடடை வழியை வகுத்த
வல்லுநர் பலரெனினும்
வானவர் மண்ணவர் மற்றவ ருந்தொழ
வான்செயல் பலசெய்த
வண்டமிழ் கன்னி வளர்த்த செழுந்தமிழ்
வரம்பமை தித்திக்கும்
தேன்சொரி தெய்வத் தீந்தமிழ் மொழியிற்
றிறம்பா அறமுரைத்த
தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்
திறமெவ ருக்குவரும்
ஆன்றவர் உரைவழி செயல்புரி அறவோய்!
ஆடுக செங்கீரை!
அருள்வடி வங்கொண் டவனியில் வந்தவ!
ஆடுக செங்கீரை! எ

உலகவர் அவரவர் மதமத குருகுரு
வெனவென உன்னரிய
உயரிய ஒருதனி உறுசெயல் ஒண்புகழ்
ஒளியெனும் உன்னுமம்

பலபல படிசொலி அநுதின மும்மகிழ்
பரிசெவர் அறியாதார்
படிதனில் அனைவரும் ஒருபடி எனவுணர்
படிறில் பெருந்தகையே!
கலகல வெனவெறும் உரைபல மொழிகுநர்
மிகமலி காசினியில்
கருதிய தெதுவெனு அதுவது புரியெங்
காந்திப் பெருமானே!
அலைபுனை நிலமகள் துயர்களை அந்தண
ஆடுக செங்கீரை!
அருள்வடி வங்கொண் டவனியில் வந்தவ!
ஆடுக செங்கீரை ௪

பிறப்பினில் எல்லா உயிர்களு நிகரெனப்
பேசிய பேரறிஞன்
பெரியோன் வள்ளுவன் நல்லுரை மறந்து
பேணத் தக்கவுயர்
சிறப்பெது மிலராய்த் தக்க தகாதன
சீர்தூக் கறிவின்றித்
தீமை புரிந்து நல்லன கனவினுஞ்
சிந்தனை செய்யாத
மறத்தொழி லவரும் பிறப்பினி லுயர்வென
மனத்தெணி மற்றதனல்
மாண்பின ரேனு மிழிவுப டுத்தும்
மதியில் கொடுஞ்செயலை

அறக்களேர் தருள அவதரித் தவனே!
ஆடுக செங்கீரை!
அருள்வடி வங்கொண் டவனியில் வந்தவ!
ஆடுக செங்கீரை! க

இன்ன செய்தார் நாண நன்னயம்
இயற்ற வேண்டுமென
இணையில் புலவன் இயம்பிய இன்னுரை
ஏட்டள வோடின்றித்
தென்னுப் பிரிக்கா ஆதிய இடங்களில்
செய்து காட்டியநின்
கீர்த்தி யுரைக்க வல்லவன் இந்தச்
சிறுமதி யுடையேனே?
கொன்னே அந்தோ முன்னற் கரிய
கொடுமையிற் பல்லுயிரைக்
கோறல் புரிந்த டயரும் வருந்தின்
கூர்வல் உதவியெனுஞ்
செந்நா வுடையாய்! செய்கையும் வல்லாய்!
செங்கோ செங்கீரை!
திருமகள் உறையுந் திருநா டுடையாய்!
செங்கோ செங்கீரை! கo

ஆகச் செய்யுள் உo-



# 3. தாலப் பருவம்

அன்பா லுலகை வயப்படுத்தி
யாருஞ் செய்தற் கரியசெயல்
ஆற்றி அருளை யறத்தையுயர்
ஆண்மை தன்னை அகலாத
இன்ப வாழ்வை எஞ்ஞான்றும்
இன்றி யமையாத் தைரியத்தை
எல்லா உயிருஞ் சமமென்னும்
இனிய கருத்தை ஏதமிலா
என்போற் சிறிய ஏழையரின்
இதயம் பதித்த நன்றியென்றும்
எளியேன் உள்ளங் கோவில்கொண்
டிருக்குங் கருணை இருங்கடலே!
வன்பா தகர்க்குங் கதியளிக்கும்
வள்ளால்! தாலோ தாலேலோ!
மக்கள் உய்ய அவதரித்த
மகாத்ம! தாலோ தாலேலோ! க

கன்னல் கண்டு சருக்கரைதேன்
கனிவின் அமுதங் கரும்பட்ட
கட்டிச் சுவையுங் கசப்பென்னக்
கழறு மாறு கனிந்தபெருக்

தன்னொப் பில்லாத் தனிமுதல்வன்
தலைமை யிருக்க அவனடிக்கீழ்ச்
சங்கம் இருந்து வளர்ந்தபசுந்
தனிய இனிய தமிழ்க்கோமான்
தென்னன் சோழன் சேரனுயர்
செனகன் ராமன் தருமனெனும்
செங்கோல் வேந்தர் அரசாண்ட
திறம்பா முறையைத் தீநெறிகள்
மன்னும் உலகில் நிலைநாட்ட
வந்தாய்! தாலோ தாலேலோ!
மக்கள் உய்ய அவதரித்த
மகாத்ம! தாலோ தாலேலோ! உ

ஈசன் எந்தை இணையடியை
இதயம் பதித்தே அவனருளால்
இடற விட்ட கரிபணிய
இணைத்த நீற்றின் அறையினிய
மாசில் வீணை மாலைவரு
மதிய மோடு மகிழ்காற்றாய்
வசந்த கால மாய்த்திகழ்
மடித்தற் பொருட்டு வரிந்தசிலை
தூசில் உயர்ந்த தெப்பமதாய்த்
துலங்க ஆழிக் கரைகண்ட
தூயோன் கடைய ருத்துறவி
துன்னு சக்தி யாக்கிரக

வாச மலிசீர் நாவரையன்
வாவே! தாலோ தாலேலோ!
மக்கள் உய்ய அவதரித்த
மகாத்ம! தாலோ தாலேலோ!

இந்நாள் இந்தி யாவிலுளார்
இன்றி அமையாத் தாய்மொழியை
இளமை தன்னிற் பயிலாமே
எதி லாரின் ஆங்கிலத்தைப்
பன்னாள் பயின்றும் அமையாமல்
பாநா டணுகிப் படித்தங்கு
பட்டந் தாங்கி வரவேகும்
பலர்போல் நீயும் பண்பின்றி
இன்னா நல்கும் பாதகங்கள்
இயையு மேற்கு நாடுபுகுந்
திருந்தாய்! எனினும் அந்நாட்டார்
இன்பம் எனக்கொள் பாதகத்துள்
மன்னா தன்னை பால்மொழிந்த
மாற்றம் பரந்தோய்! தாலேலோ!
மக்கள் உய்ய அவதரித்த
மகாத்ம! தாலோ தாலேலோ!

முன்னம் நமது திருநாட்டில்
முதிர்ந்த அறிவும் பலர்புகழும்
மொய்ம்பும் படைத்து உலகுய்ய
மொழியும் பெருக்கி முனிவகற்றிப்

பன்னற் கரிய பலபணிகள்
பண்பாய் ஆற்றிச் சமயமெனும்
பாட்டை வகுத்துப் பற்றறுத்துப்
பரம கருணு நிதியாகி
இன்னல் எய்தின் தாமேற்று
இனிய அனைத்தும் படிக்கீந்தோர்
எண்ணற் ருர்கள் எனினுமுனை
ஏய்ப்பார் ஞாலத் தெவரையா?
வன்னம் நிறையும் பாரதத்தாய்
மைந்தா! தாலோ தாலேலோ!
மக்கள் உய்ய அவதரித்த
மகாத்ம! தாலோ தாலேலோ! ௬

வேறு

மெய்த்திரு வரினும் வெந்துயர் வரினும்
விருப்பு வெறுப்பின்றி
மேனுள் ஆன விதிவழி யன்றி
மேவா தியார்க்குமென
ஒத்த மனம்பெற் றுயர்வழி பற்றி
ஒழுகும் உரவோனே!
உண்மைக் கொருவ! திண்மைப் பெரிய!
உறுதிக் குறையுள்ளே!
ஒத்துழை யாமைத் தத்துவ மதனை
உலகறி யச்செய்த
உத்தம! மோகன் தாசன் எனும்பேர்
உறுதவ! என்னுயிரே! ௨

தத்தலே வேலேத் தாணி விளக்கே!
தாலோ தாலேலோ!
தண்ணளி உடையெம் காந்திப் பெரும!
தாலோ தாலேலோ! ௬

மக்கட் குள்ளே பாகு படுத்தின்
மாண்செயல் குணமாதி
வான்வழி பற்றி வகுக்கும் அதுவே
மரபாம்! அஃதன்றித்
தொக்க உடலின் தோற்றங் கொண்டு
சொல்லுதல் அறியாமை!
தோன்றிய யாவும் ஒக்கும் பிறப்பில்
தொழிலொவ் வாதெனவே
பொக்கம் மிக்கவர் புந்தி அழுந்தப்
பொய்யில் பெரும்புலவன்
புகலற மொழியைப் பூவறி யச்செய்
புண்ணியன் நீயன்றோ?
தக்கோர் போற்றுந் தாணிப் பெரியோய்!
தாலோ தாலேலோ!
தண்ணளி உடையெம் காந்திப் பெரும!
தாலோ தாலேலோ! ௭

செல்வம் கல்வி தொழிலதி காரம்
திண்மை முதலான
திருவுடன் இந்நாள் செகந்தனில் வாழும்
தேசத் தறிஞருமே

மல்லல் மிக்க மாநிலம் அதனில்
யார்பெரி யாரென்ன
வகுத்து வகுத்து வானளவோட
வண்புகழ் கொண்டந்நாள்
அல்லல் கடலுள் இன்று கிடக்கும்
அறமலி திருநாட்டில்
அவதரித் தருளுங் காந்தியே பெரியார்
அவனியில் என்னநிறுத்
தல்லறி யாதார் தாணியில் உளரோ?
தாலோ தாலேலோ!
தண்ணளி உடையெம் காந்திப் பெரும!
தாலோ தாலேலோ! அ

அந்தணர் என்போர் அறவோர் என்றே
அறமுறை வள்ளுவனார்
அணிபெற அருளிய அருமையின் உயர்வை
அறியா திந்நாளில்
தந்திர மாகச் சாதிசா தியெனச்
சாற்றிப் பொருளின்றித்
தாந்தாம் அந்தணர் எனப்பல பேசுந்
தகுதியி லரமாக்கள்
சிந்தை நாணச் செயல்செய் தந்தணச்
சீர்த்தியைத் தனிகொள்ளும்
சீல! உனைப்போல் யாருளர் பண்டு
சீர்பெற் றிருந்தவரிச்

சந்திரன் எனவே வாய்மை புரப்போய்!
தாலோ தாலேலோ!
தண்ணளி உடையெம் காந்திப் பெரும!
தாலோ தாலேலோ! ௯

தன்னர சளிப்பது ராட்டினம் ஆகும்
தரித்தத லக்கையால்
தாழா கொடியுஞ் சுழற்றுக வென்னச்
சாற்றிய பெருமானே!
மன்னவர் ஆயினும் வானவர் ஆயினும்
மற்றவர் ஆனாலும்
வழிதடு மாறி மறம்புரி வாரேல்
மதியா தவர்பிழையை
என்வரி னும்மதற் கிறையும் அஞ்சா
தியம்பும் உரவோனே!
என்னிரு கண்ணே! கண்ணுறு மணியே!
என்னார் இன்னுயிரே!
தன்னிகர் இல்லாத் தாணிப் பெரியோய்!
தாலோ தாலேலோ!
தண்ணளி உடையெம் காந்திப் பெரும!
தாலோ தாலேலோ! ௧௦

ஆகச் செய்யுள் ௩௦.



# 4. சப்பாணிப் பருவம்

---

இனிப்பிறவி எடுக்கும்போ தெம்பெருமான்
உன்குணத்தை இறைவிடாதெல் லாங்கொ டுத்த
இரும்புவியில் இனிமைசெறி என்னருமைத்
தமிழ்நாட்டில் எளியேன்பி றக்க வேண்டும்
கனித்தமொழிக் காரிகையைக் கடிகொள்வ
தானால்நின் காதலிகஸ் தூரி யொத்த
கவினமனை யறம்வளர்க்குங் காதலியைப்
பெற்றடியேன் கடைத்தேற அருள வேண்டும்
மனக்கினிய மகவுளவேல் வள்ளால்நின்
மக்களைப்போல் அதிற்றேவ தாச னைப்போல்
மகவுபல வேண்டுமையா! மாட்சிபெற
இத்துணையும் வாய்த்தநீ பாக்ய வானே
தனிப்பெரியன் இருமுலகுக் கென்னநிலை
சார்ந்தவனே! சப்பாணி கொட்டி யருளே!
தருமநெறி வாழவரு காந்திப்பெ
ருந்தகையே! சப்பாணி கொட்டி யருளே! க

பிறர்குற்றம் பாராட்டாப் பெருந்தகையை
உலகம்நனி பிறங்கிடவே பேசு மானால்
பிறர்குற்றம் அத்துணையுந் தங்குற்ற
மாக்கொள்ளும் பெருமைபெறு நின்கு ணத்தின்

முறைமுறைகொண் டுன்செயல்கள் மொழியுமா
றறிகில்லேன் முழுமுட னென்செ யவலேன்
மொழியுமறந் தனையாற்ற முடியாமற்
பிறசெய்யும் மொய்ம்பில்லார் தம்மை நோக்கி
இறையுமவர்ச் சினந்துரையா தெற்கில்லைத்
திறமையென இயம்புமுன திணையி லாத
எழிலாரும் திருமொழியை எம்மொழியான்
எடுத்துரைப்பே னிந்தியர்கள் வாழ வந்தோய்!
தறையுய்ய உயர்சாந்தம் ததும்புமுரை
பகர்ந்தாய்! சப்பாணி கொட்டி யருளே!
தருமநெறி வாழவரு காந்திப்பெ
ருந்தகையே! சப்பாணி கொட்டி யருளே! உ

தீண்டாமை ஒழிகவெனத் திருவாயால்
மொழிந்திடுவார்! செயல்புரிய அஞ்சி யந்தோ
தெருவழியே அவர்வரினுஞ் செல்லப்பால்
நில்லாதே சீச்சீபோ என்று ரைப்பார்!
தீண்டாமை ஒழிவதற்கு மொழிபுகல்தல்
அமைந்திடுமோ? செயலின்றி மேடை யேறிச்
செகநடுங்கக் கலகலெனப் பலபலசொற்
புகலுவதால் பயனுண்டோ? செய்து காட்ட
வேண்டாமோ? அதுகாட்ட அக்குலத்திற்
பிறந்ததிரு மாமகள்பேர் மேவு பெண்ணை
விரும்பிவளர்த் தெடுக்குமருள் பழுத்தொழுகு
மேதகவோய்! மேன்மையுறு நீதி தன்னைத்

தாண்டாத தண்ணளியே! தனியாடைப்
பெருமானே! சப்பாணி கொட்டி யருளே!
தருமநெறி வாழவரு காந்திப்பெ
ருந்தகையே! சப்பாணி கொட்டி யருளே! ௫

எதிர்கால வாழ்விற்குப் பொருள்தேடா
தன்றன்று கிடைப்பவையுண் டினிய செய்தே
இரும்புவியின் நலம்நாடி அறம்புரியும்
பெரியோரே எவ்வுயிரும் ஒப்ப நோக்கும்
கதிகாணும் அந்தணராம்! எனமேலோர்
உரைத்தபடி காசினியில் எவ்வி டத்துங்
காண்பாரார் உனையன்றி அந்தணரை!
இதுசரதம்! கனத்தநில துடைமையெல்லாம்
மதியாமல் அறவழியில் வாரிவிட்டே
இன்றுலக மக்களற வழியி னிற்க
மாதவமே செய்கின்ற நின்குணத்தை
ஒண்புகழை மகிமையுடத் தேவ நாட்டுஞ்
சதியாதார் செய்ந்நன்றி கொன்றாரே
சங்கையிலை சப்பாணி கொட்டி யருளே!
தருமநெறி வாழவரு காந்திப்பெ
ருந்தகையே! சப்பாணி கொட்டி யருளே! ௬

கொன்னேநம் இந்தியரைக் கூலியெனப்
பெயர்தந்து கொடியவடல் நிறம்பி ரித்துக்
கொண்டுருணஞ் செயலாதி கூர்ந்தாயா
திறமாந்து கூசாமல் இழித்து ரைத்த

அன்னியர்கள் செய்கொடுமை அறிந்தவுடன்
ஆற்ருதே அவான்பிற் கெளிய ளுகி
அங்குற்றன் னியர்செயலுக் கிலக்காகி
அடியும்பட் டடங்தோவென் சொல்வ னந்தத்
தென்னுப்பி ரிக்காவில் திருமகள்நேர்
மனேவியொடு சிறைப்பட்டு நீகி டந்த
செயலுரைத்தற் கெளிதாமோ? இதுசெய்தார்
பெரியரெனச் செப்புவதற் கய்ய மென்னே?
தன்னேரில் லாதவனே! என்னிதயம்
உள்ளவனே! சப்பாணி கொட்டி யருளே!
தருமநெறி வாழவரு காந்திப்பெ
ருந்தகையே! சப்பாணி கொட்டி யருளே!

வேறு

இனிமை செறிந்திடு தமிழ்மொழி அதனே
ஏற்கா தம்மக்கள்
இருநிலம் அறிய இழித்தாங் கிலமொழி
ஏற்றுத் திரிவதுபோல்
தனிமொழி ஆகிய தாய்மொழி பேணுந்
தன்னறி வில்லார்க்குத்
தாரகம் ஆவது தாய்மொழி யேயெனத்
தாட்டிக முடன்கூறும்
கனிவு பொருந்தச் சோதார் யாரையுங்
கட்டித் தழுவாதே
கண்டிடிற் றீண்டத் தகாதவ ரென்னக்
காவத வழியோடும்

குனிவுறு மாந்தர் கோளரி அனையாய்!
கொட்டுக சப்பாணி!
கோதறு குணமுள கூர்ஜர நாட!
கொட்டுக சப்பாணி ௬

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யேல் தான்பிற
தின்னுயிர் நீக்குவினை
தன்னையென் றந்த வள்ளுவ ரன்று
சாற்றிய உரைப்படியே
பன்னற் கரியநின் சபர்மதி யாச்ரமப்
பாங்குறை பாம்புகளைப்
பாறிட வேண்டிய பக்தரைத் தடுத்துப்
பரமனெவ் வுயிர்களினும்
மன்னுதல் கண்டும் மாபல கோறல்
மாற்றுக இக்கருத்தை
மாசுகம் பாவில எனில்நமைச் செய்வதென்?
மற்றவை இன்னுயிரைக்
கொன்னே போக்குதல் அவமென உரைத்தவ!
கொட்டுக சப்பாணி!
கோதறு குணமுள கூர்ஜர நாட!
கொட்டுக சப்பாணி! ௭

ஏழைபங் காளன் எம்மான் நீயென
இயம்புதல் என்குற்றம்
ஏழையர் பொருட்டா எந்தைநீ செய்த
இருஞ்செயல் யார் வல்லார்?

காழுடன் அந்நாள் ஆலையின் தொழிலோர்
கருதிய கூலிபெறக்
கருமம் விடுத்துப் பட்டினி கிடந்த
காலத் தவர்க்காக
வாழியெம் பெருமான்! உணவுகொள் ளாமல்
வருந்திச் சின்னாளில்
மகிழவ வர்க்கருள் மாண்செயல் ஏழை
வகுக்குந் தாமாமோ?
கோழை தவிர்க்கப் பிறந்தருள் குருவே?
கொட்டுக சப்பாணி!
கோதறு குணமுள கூர்ஜா நாட!
கொட்டுக சப்பாணி! அ

மேனாட் செய்த வினைவழி இந்த
மேதினி தனிலிறைவன்
மிகுபொருள் சிறுபொருள் அவரவர்க் கேற்ப
மேவிடத் தருமென்றும்
ஆனவப் பொருளில் பிறர்பொருள் ஒருவன்
வெளவுதல் களவென்றும்
அறமுறை நூலும் பிறபெரி யோரும்
அறையக் கேட்டனமால்
கானமர் மொழிசேர் காந்திப் பெரும!
கடல்சூழ் காசினியில்
காரியம் ஆற்றத் தகுபொருள் தவிரக்
களவே மற்றதெனக்

கோனே! நின்பால் அன்றிக் கேட்டிலம்
கொட்டுக சப்பாணி!
கோதறு குணமுள சூர்ஜா நாட
கொட்டுக சப்பாணி! ௯

வேறு.

இத்தரை செழிக்க இன்றே
இணையிலா ராட்டை எடுத்தே
எழில்மிகு பஞ்சைக் கதிரில்
ஏற்றியே நூற்ற நூலைக்
கைத்தறி கொண்டு நெய்வீர்!
கடைத்தே றுமார்க்கம் இதுவே!
கண்ணிய மின்றி வீணே
கனதனப் பட்டங் தாங்கிப்
பித்தரைப் போலலைங் தந்தோ!
பேசுவதிற் பயன் என்னே!
பேச்சைச் சுருக்கி இன்றே
பெருக்குக செய்கையை என்று
சத்திய உரையருள் சான்றோய்!
சப்பா ணிகொட்டி யருளே!
சற்குரு மணியே காந்தி!
சப்பா ணிகொட்டி யருளே! ௧௦

ஆகச் செய்யுள் ௬௦.

---

# 5. முத்தப் பருவம்.

சிந்தை இனிக்கும்! செவியினிக்கும்!
தேகம் புளகாங் கிதமெய்தும்!
திருவாய் இனிக்கும்! கண்களிக்கும்!
தெவிட்டா இன்பஞ் சேர்ந்திடும்! பின்
மூந்தை வினைகள் முறிந்தோடும்!
முனிவிங் கிடமே தினியென்று
முதுகு காட்டும்! மொழி நன்றும்!
முத்தி கிடைக்கும்! பெருங்கருணை
வந்துபொருந்தும்! காந்தியெனும்
வள்ளால்! நினது திருப்பெயரை
மனத்திற் பதிக்கச் செவிமடுக்க
வழுத்தக் காணப் பெறுவார்க்குச்
சிந்துஞ் சாந்தக் கனிவாயால்
தேவா முத்தந் தருகவே!
செல்வா நின்றன் மெய்ம்மணக்குந்
திருவாய் முத்தந் தருகவே! க

இகத்திற் பரத்தில் உறுமின்பம்
யாவும் நல்கும்! இருவினையை
இல்லா தழிக்கும்! இணையில்லாய்!
என்றும் உலாவப் பேரின்பம்

அகத்துண் டாக்கும்! ஆணவத்தை
அறவே அகற்றும்! அறிவளிக்கும்
அழியாப் புகழை ஆக்கிடும்!பின்
ஆன்ம ஞானம் அடையியும்!
முகத்திற் றிருமான் கடமாக்கும்!
முடிவில் புகழான் முதறிஞன்
முனிவொன் றுண்டென் றறியாத
மோகன் தாச காந்தியெனும்
செகத்தில் உயர்ந்த பாரதத்தாய்ச்
சேயே முத்தந் தருகவே!
செல்வா நின்றன் மெய்ம்மனக்குந்
திருவாய் முத்தந் தருகவே! உ

மாணம் வரினும் பிறவரினும்
மதியா தவற்றை மயிர்நீப்பின்
வாழாக் கவரி மானென்ன
மானம் புரந்து மாற்றார்பால்
சாணம் புகுந்தே மற்றவரின்
தயவை நாடி இரந்துண்ணும்
தன்மை கொண்ட தேசிய
சபையைச் சகத்தார் யாவருமித்
தருணம் மதிக்க நிறுத்தியதிற்
சத்யம் பொறுமை கருணையெனும்
தக்க பொருள்கள் தமைவிரவித்
தாணி இன்ப வாழ்வதனைத்

திரணம் எனவே கொள்காந்தித்
　　தீரா! முத்தந் தருகவே!
　செல்வா நின்றன் மெய்ம்மணக்குந்
　　திருவாய் முத்தந் தருகவே! ௬

செங்கோல் செலுத்தும் முறைதிறம்பின்
　　செய்யத் தக்க திதுவென்னும்
　செம்மை யறத்தை யுலகிற்குச்
　　செப்பி அதனாற் சிறைக்கோட்டம்
துங்க முறநீ புகுந்துறைநாள்
　　தொழுதுன் அருளைப் பெறவந்த
　தூய நின்றன் நல்வாழ்க்கைத்
　　துணைவி துரிசில் திருமனத்தாள்
எங்கள் அன்னை கஸ்தூரி
　　இனிய முகத்தை நோக்கிநீ
　இன்னுஞ் சிறையேன் ஏகவில்லை
　　என்ன மொழிந்த கனிவாயால்
தெங்கு மலியும் திருநாட்டுத்
　　திருவே முத்தந் தருகவே!
　செல்வா நின்றன் மெய்ம்மணக்குந்
　　திருவாய் முத்தந் தருகவே! ௭

தேனார் மொழிசேர் பாஞ்சாலச்
　　சீரார் செல்வப் பாவையரைச்
　செய்யா தனசெய் தவமதித்துச்
　　சிறுவர் பெரியோர் பல்லோரை

வானு டேற்றி எக்காளும்
மறக்க முடியாப் பழிகொண்ட
வண்ணங் கண்டும் அவர்ச்சினந்து
மாற்றம் ஒன்றும் உரையாது
தானே அரசு வந்தெய்தும்
சத்யாக் கிரக நெறிபிடித்தால்
சாதம் இதுவே என்றுரைத்த
தண்மைக் காந்தி! சாந்தமெனுந்
தேனே ஒழுகு செம்பவளத்
திருவாய் முத்தந் தருகவே!
செல்வா நின்றன் மெய்ம்மனக்குத்
திருவாய் முத்தந் தருகவே! ௫

பாரார் புகழ்சேர் பார்த்தனபி
மன்னன் வீமன் பகல்மைந்தன்
பண்பு மிக்க ராமனவன்
இளவல் ஆதி பலவரசர்
சீரார் வலியோ டங்காளில்
சீர்த்தி நாட்ட இனிதிருந்த
செல்வத் திருநா டின்றேழைத்
தேச மாகிச் செயலிழந்து
ஆரார் வரினும் அரசுமுதல்
அனைத்துங் கொடுத்தே அவர்வாய்பார்த்
தண்ணாந் திரங்கி அழியுமதற்
காற்று துரிமைப் போராடும்

தீரா! காந்தி! செம்பவளத்
திருவாய் முத்தந் தருகவே!
செல்வா நின்றன் மெய்ம்மணக்குந்
திருவாய் முத்தந் தருகவே ௬

வேறு.

இறைமனம் இஃதுற அறம்புரி நின்னை
இப்புவி மக்கள்சிலர்
எங்கிருந் தோவந் திங்குசெய் சட்டம்
கடந்தனை எனச்சொல்லி
சிறைசெய்து நீதி மன்றத் தேற்றிச்
செப்புக மொழியென்னச்
சீலநீ அரங்கத் தன்று மொழிந்த
திண்மைகொள் திருமொழியைத்
தறைமதி இரவி தாமுள வரையும்
தங்கத் தேடுசெய்து
சாலப் படித்தே அறநெறி மும்மது
சாற்றற் கரியதகு
முறையுள தன்றால்! அத்திரு வாயால்
முத்தம் அளித்தருளே!
மொழிவழி உறையும் மோகன தாச!
முத்தம் அளித்தருளே! ௭

நின்வழக் கதனில் தீர்ப்புரை அதிபர்
நின்வய மேயாகி
நிலவிய ஆங்கிலச் சட்டப் படியே
நினைச்சிறை புகல்வதற்குத்

தன்மனத் தெணியுன் தகுதியை நோக்கிச்
சஞ்சல மிகவுற்றுச்
சாலப் பலப்பல மாற்றம் உரைத்துத்
தண்டிக் கும்பொழுதும்
என்னினும் மிக்க இருங்களிப் புடையார்
எவரும் இரார் நீங்கள்
எழில்பெற விடுதலை யேற்றால் எனஅன்
றியம்பிய இன்னுரையை
முன்னி மகிழ்ந்தேன் முனிவறு மாதாய்!
முத்தம் அளித்தருளே!
மொழிவழி உரையும் மோகன தாச!
முத்தம் அளித்தருளே! அ

இந்தியர் ஆருயிர் நீயென இயம்பல்
இம்மியும் மிகையில்லை
இத்தகை உயிர்உடல் நீங்கிடு மோவென்
றெண்ணத் தக்கநிலை
வந்த பெரும்பிணி யாலன் றுன்னுடல்
வாள்கொண் டறுக்குமுன்னர்
மருங்கமர் ஒருவர் நாட்டிற் கென்ன
மாற்றமை யாவென்னச்
சிந்தைகொண் டேதும் செப்ப மறுத்துச்
சிறையாள் ஆகும்நான்
செய்தி உரைத்தல் தகாதென மொழிந்த
செய்கையை என்னென்பேன்!

முந்தி விரைந்தம் மொழிபகர் வாயால்
முத்தம் அளித்தருளே!
மொழிவழி உறையும் மோகன தாச!
முத்தம் அளித்தருளே! ௯

இருமூன் றாண்டு சிறைவாழ் வேற்றே
ஏர்வா டாத்தலத்தில்
இனிதமர் நாளில் இரும்பிணி உறவே
எம்மான் உனைப்பூனாப்
பெருநகர் கொடுபோய்ச் சாஜுன் வைத்ய
சாலை பிறங்கவைத்துப்
பெரும்புகழ் கொண்டார் "மாடாக்" ஆண்டு
பெரியோய்! நீபெற்ற
அருமுப சாரம் யாரே பெற்றார்'
அரசரில் வந்தாலும்
அடைதற் கரிதே சிறையாள் ஆன
ஐயநீ பெற்றவது
முருகமர் செயலோய்! முன்னிய! புரிவோய்!
முத்தம் அளித்தருளே!
மொழிவழி உறையும் மோகன தாச!
முத்தம் அளித்தருளே! ௧௦

ஆகச் செய்யுள் ௱



# 6 வருகைப் பருவம்

அய்ய வருக! பாரதநாட்
டரசே வருக! உலகிற்கோர்
அணியே வருக! அடியேனை
ஆண்டாய் வருக! அவனியெலாம்
உய்ய வருக! உயிர்க்கெல்லாம்
உயிரே வருக! உத்தமரின்
உணர்வே வருக! ஓராடை
உடுத்தாய் வருக! உண்மையுரை
செய்ய வருக! பூமிக்கோர்
திலக வருக! தெருளளிக்கும்
செல்வ வருக! நெறிதிறம்பாச்
செம்மல் வருக! சீர்மருவு
கய்ய வருக! கருணைபுரி
காந்தி வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா! வருக! வருகவே! க

காந்தி வருக! கருணைபுரி
கடலே வருக! ஏழையேன்
கண்ணே வருக! இந்தியரின்
கருத்தே வருக' என்னன்பை

மாந்த வருக! மக்களுய
வந்தாய் வருக! பழஅறத்தை
வகுத்தாய் வருக! வடிவுடைய
வள்ளால் வருக! மண்முழுதும்
சாந்தி நிலவ உரையருளும்
சான்றோய் வருக! தண்ணளிசேர்
தலைவ வருக! தார்மன்னர்
தருமச் செங்கோல் தாங்கஅருள்
காந்தி வருக! அருள்பழுத்த
கனியே வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா! வருக! வருகவே!

உ

எந்தாய் வருக! எழிலாரும்
எம்மான் வருக! எனையாளும்
இறைவா வருக! ஏழையேன்
இதயங் கொளநின் இணையடியைத்
தந்தாய் வருக! சன்மார்க்கஞ்
சார்ந்து தமியேன் கடைத்தேறத்
தன்மை ஒழுக அருளுபெருந்
தகையே வருக! சாந்தத்தின்
மைந்தா வருக! எந்தனிரு
கண்ணே வருக! கண்ணினுரு
மணியே வருக! ஆருயிரே
வருக! சிறியேன் பாட்டுக்கு

கந்தே வருக! கருதரிய
காந்தி! வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக! வருகவே! ௬

பெரும வருக! அறமலியப்
பிறந்தோய் வருக! பீடுடைய
பெம்மான் வருக! புவிக்குள்ளே
பெரியோய் வருக! பிறர்பொருட்டா
அருமை உறுநின் உடல்பொருளும்
ஆவி மக்கள் மனையாதி
அனைத்தும் விடுத்தோர் கதராடை
அணிந்தே ஏழ்மை நிலைகொண்ட
தரும உருவே வருக! வெலாஞ்
சாற்றல் எளிய அவ்வண்ணஞ்
சாதித் திடுதல் அரியவெனுஞ்
சான்ற புலவன் உரைமறுத்துக்
கருமம் ஆற்றிப் பின்புசொலும்
காந்தி! வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக! வருகவே! ௭

ஞாலம் மதிக்கும் பெருங்கொள்கை
நாட்ட வருக! கதர்ப்பெருமை
நவில வருக! தீண்டாமை
நலிய வருக! நாட்டேந்தச்

சீல வருக! ஜம்பாவம்
தேய வருக! சிறுதகையேன்
திருந்த வருக! தீமையெலாம்
திறம்ப வருக! திருக்கருணை
சால வருக! தனியாடை
தரிக்க வருக! சாந்தநிலை
ததும்ப வருக! தருக்கனைத்துஞ்
சாக வருக! தாரணியிக்
காலம் உய்யப் பிறந்தருளுங்
காந்தி! வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக! வருகவே! ௬

வள்ளால் வருக! பாரதத்தாய்
மைந்தா வருக! மண்முழுதும்
மதிக்கவாழும் மாண்புடைய
மணியே வருக! மறுமையெனும்
தள்ளாப் பொருளொன் றுளதென்னுந்
தன்மை யறியா துறங்கொன்று
தாய்நாடாளுந் தனியுரிமை
தகைசால் மக்கட் கில்லையென
எள்ளா எவர்க்கும் அதிபரெனும்
இறுமாப் புற்று நனியுழல் வோர்க்
கினிய உவாதந் திடேற்ற
என்னும் பெரியோய் வருகவே!

கள்ளார் மகர்க்கும் அறிவளிக்கும்
காந்தி! வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக! வருகவே! சு

சாதி சமயச் சண்டையெனுஞ்
சுழியிற் பட்டுத் தடுமாறிச்
சத்தி யத்தை அறமறந்து
தருக்கிக் குலத்தாற் பெரியோனன்
பேதை சிறியன் நீபிறப்பில்
என்னப் பிதற்றிப் பெரியாரைப்
பிழைப்ப தன்றிப் பொருளானும்
தொழிலாற் பிறவாற் பெருமைசொலும்
ஏதி லார்க்கும் இனியமொழி
இயம்பி அவர்கள் கொள்கையெலாம்
இருள்போல் ஏகப் பேரொளியை
எங்கும் பரப்பும் இணையில்லாய்!
காதல் கொண்டுன் அடிசேர்ந்தேன்
காந்தி! வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே! எ

சாந்தம் என்னும் பெருங்கடலில்
சத்யம் என்னும் தூண்நாட்டித்
தகைசால் பொறையை மத்தாக்கித்
தருமம் என்னும் நாண்போக்கி

வாய்ந்த அவற்றின் இருமருங்கும்
மல்லல் மிக்க இந்துமுசல்
மான்கள் என்னும் இருவேறு
மதத்து ளாரும் வலிந்திழுக்க
ஈந்த பயனும் எழுந்தபெரும்
இன்பம் என்னும் ஆரமுதை
இறைமால் ஒப்பாய்! இவ்வுலகில்
எல்லா உயிரும் உயவருளிக்
காந்தம் எனவே அன்பிழுக்கும்
காந்தி! வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக! வருகவே! அ

செந்நெல் விளையுந் திருநாடு
செழிக்க உலகம் தீநெறியில்
செல்லா துய்யச் சிறுமையெலாம்
சென்று தேய அறந்தழைக்க
மன்னர் செங்கோல் வழுவாது
மாண்பிற் செல்ல மதுவருந்தும்
மடமை ஒழிய மக்கள்தமை
மதியா தொதுக்கும் மருளகல
இன்னல் நல்குஞ் சாதிமத
இறமாப் பேக என்னனையார்
இதயங் களிக்க விளையாட
இம்மா நிலத்திற் பிறந்தருளுங்

கன்னல் அனைய திருமொழிசேர்
காந்தி! வருக! வருகவே!
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக! வருகவே! ௯

வேறு

அறமலி திருநா டவனியில் உயர
அணிபெற வருக! வருகவே!
அடியவர் உளமகிழ் தாமொழி பகரும்
ஆண்டகை வருக! வருகவே!
மறமறப் பிறந்த வடித்துத் தெளித்த
மாண்குண வருக! வருகவே!
மன்னறம் நிலைபெற வகுத்தினி தருளும்
வள்ளால்! வருக! வருகவே!
உறுதியின் ஒப்புயர் வொருவரும் இல்லா
உரவோய்! வருக! வருகவே!
உண்மை பொறுமை வீரமஞ் சாமை
உறுதவ! வருக! வருகவே!
திறமையின் அளிமிகு செயல்செயும் அந்தணச்
சீல வருக! வருகவே!
திண்மைகொள் அன்பர் மனத்துறை காந்திச்
செல்வ! வருக! வருகவே! ௧௦

ஆகச் செய்யுள் ௯௦.

---

# 7. அம்புலிப் பருவம்

விண்ணுறையும் மாமதியே! மேதினிக்குக்
கைம்மாறு வேண்டாமல் வெண்மையான
மென்மையுறு பாலனைய நிலவெனும்நின்
மெய்யொளியை விரும்பிநனி ஈயுமேலாம்
தண்ணளிமிக் குடையாய்நீ எனஉலகம்
சாற்றிடுமால்! சத்தியமே சாருவாயும்
சாந்தநிறை திருமனமுஞ் சகத்திலுள
தண்ணளிகள் எல்லாமோ ருருவெடுத்து
மண்ணுலகம் னிவாழ மழையெனவே
அருளொழுக மாணுடை ஒன்றுடுத்து
வருகாந்தி அடிகளெனும் வள்ளலனி
யோடுன்றன் வளரளியை ஆயவேண்டும்
அண்ணல் நிகர் இல்லாத அருமைமிகு
காந்தியினோ டம்புலீஇ ஆடவாவே!
அன்பதனால் உலகாளும் ஐயனுயர்
காந்தியினோ டம்புலீஇ ஆடவாவே! க

மக்களுயர் வழிபற்றிக் கொலையாதி
பாதகத்துள் மன்னுமல் வாழவைத்தல்
மாபாகும் பெரியோர்க்கவ் வழிபார்க்கின்
காந்தியெனும் மாதவனின் மாண்புநோக்கின்

ஒக்குமுழு வதுமன்னன் ஒளிமுன்னர்
சொல்லகளவு கட்காம மோடுபொய்யும்
ஓடிடுமீ துலகறிந்த தொன்றேகாண்!
உம்பருறை உன்தோற்றத் துறுவதந்தோ
அக்கமொரு மூன்றுடையான் காய்ந்தவனென்
றவனிசொலும் அருவமதாய் நின்றமாரன்
அணிவிழவே! ஆதலினால் அவனுடைான்
உடனென்றே ஐயம்நீ கொள்ளவேண்டாம்
அக்கணமே உனைப்புனிதம் ஆக்கியுடன்
ஆடிடுவான் அம்புலீஇ ஆடவாவே!
அன்பதனால் உலகாளும் ஐயனுயர்
காந்தியினோ டம்புலீஇ ஆடவாவே! உ

நாம்விண்ணில் உறைகின்றோம் அவன்மண்ணில்
உறைகின்றான் நாமவனொ டாடநேரல்
நம்பெருமைக் கழகன்றென் றெண்ணுவையோ
மாமதியே! நன்றுநின தெண்ணநீதான்
போம்நாட்டில் யாண்டில்லைப் புண்ணியனின்
புகழுண்மை புவியறியப் புகலுவாயே!
புந்திவிரி வில்லாமல் இல்லன்றிப்
பிறிதறியார் போன்றவன்நீ அல்லையேள!
தாமதிகம் உலகிலெனத் தருக்கோடு
வாழ்ந்திடுவார் தாங்களுமே பெரியரென்னச்
சாற்றியதன் றியாரையவர் யாண்டுறைந்தா
லென்னகுறை? தக்கவர்பார்த் தடைதலேமேல்

ஆமென்பர் அறிவுள்ளார் ஆதலினல்
தாழாமல் அம்புலீஇ ஆடவாவே!
அன்பதனுல் உலகாளும் ஐயனுயர்
காந்தியினே டம்புலீஇ ஆடவாவே! ௯

திங்களேஎ! உனையரவந் தீண்டிவருத்
திடுதுயரைத் தீர்த்துய்ய எண்ணமுண்டேல்
சென்றுலகம் எங்குந்தி ரிந்தாலும்
ஆகாது செப்பிடுவேன் அதற்குபாயம்!
எங்களுயர் நாயகனிவ் விரும்புவியில்
ஈடில்லான்! எல்லாம்பொ றுக்குமெம்மான்!
இடாகலச் சபர்மதியில் எழுந்தருளி
இனிதிருக்கும் இணையில்சீர் கொண்டஎந்தை!
பொங்குதிருக் கமலமலர் போதாவிப்
பழிதீரும் புயங்கனவன் அன்பனன்னுன்
புயத்தினெடு மடிதனிலும் ஏறிவிளை
யாடுகதை புவியறியும் ஆதலாலே
அங்கண்வந் தின்புபெற அண்ணலெம
காந்தியினே டம்புலீஇ ஆடவாவே!
அன்பதனுல் உலகாளும் ஐயனுயர்
காந்தியினே டம்புலீஇ ஆடவாவே! ௧௦

நிலைகள் ஈரெட்டே தாமுடையாய்! [னில்
லேயனவன் நெய்தவொற்றைக் கலையொடெண்
ணோன பல்கலைகள் தாமுடையான்!
நினக்குமறு உண்டன்னுன் மறுவிலாதான்!

வாகுடைய மழைமறைத்தால் ஒளிகுறைவாய்!
அவனொளியை வலிகொண்டு மறைக்கவல்லார்
மண்ணகத்தும் வானகத்தும் யாண்டுமிலை!
மாமதியே! நீநாளும் வரிசையாகத்
தேகந்தான் தேய்ந்தழிவாய்! ஒளிகுறைவாய்!
பின்மிகுவாய்! திண்மைநிறை எங்களையன்
சீரான நிறைவுள்ளான்! நின்தோற்றம்
இரவிற்றான் சீலனொளி இறையுநீங்கா
தாகவுள தாதலினால் அப்பெரிய
அண்ணலினோ டம்புலீஇ ஆடவாவே!
அன்பதனால் உலகாளும் ஐயனுயர்
காந்தியினோ டம்புலீஇ ஆடவாவே ௫

சத்தியத்தைத் தருமத்தைச் சாந்தத்தைத்
தைரியத்தைத் தனிப்பொறையைச் கருணைதன்
சத்யாக்கி ரகமெனுந் தாணிபுகழ் [னைச்
இயக்கத்தின் தத்துவத்தைச் சாற்றியன்பாய்க்
கத்தருடை உதவிடுவான்! கட்டிமகிழ்
வெய்திடலாம்! கணக்கிட்டு ரைக்கவொண்ணுக்
கண்ணியமி குந்ததது! கைராட்டு
நூல்கொண்டு கைத்தறியில் நெய்ததாமல்!
சத்தியுனை சனியேற்று நாடறிந்த
நின்களங்கம் நலிந்தோட ஞானமெய்த
நாட்டமது வைத்திடுவான் எங்காந்தி'
அன்னவனை நாடிவா நல்லொழுக்கம்

அத்தனையும் எய்திடலாம்! ஆதலினல்
அன்னேடம்புலீஇ ஆடவாவே!
அன்பதனல் உலகாளூர் ஐயனுயர்
காந்தியினேடம்புலீஇ ஆடவாவே!

ஒழுக்கமது விழுப்பத்தைத் தருதலினல்
அவ்வொழுக்கம் உயிரதினும் உயர்ந்ததாக
ஓம்புதகை மிக்கதென உரைத்ததிரு
வள்ளுவனர் உண்மையுரை கொண்டுசெய்கை
இழைத்தவருள் இணையில்லை ஏனேரென்
றெடுத்தேத்தும் ஏதமிலா எந்தை யம்மான்!
இன்னுத எண்ணுதான்! மறுமாதர்
இன்முகத்தை எந்நாளும் நோக்கிலாத
விழுப்பமுளான் எங்காந்தி! மேனுள்நீ
குருமனையை விழைந்தல்லல் உற்றையென்ப!
மேதகவோன் முனிவானே எனவஞ்சி
விளையாடல் ஒழியாமல் மேவுவாயே!
அழுத்தமுற மதிபுகல்வான்! முனிவறியான்!
ஆதலினல் அம்புலீஇ ஆடவாவே!
அன்பதனல் உலகாளும் ஐயனுயர்
காந்தியினேடம்புலீஇ ஆடவாவே! எ

மறைபுகலும் நெறியதனை வடிகட்டி
இனிதெடுத்து மண்ணுலக மாந்தருய்ய
மாண்புமிகும் அறநெறியை மாசில்லா
ஒழுக்கத்தை மன்னுத உடலோக்கிப்

பறையரென ஒருசாரார் பரிதபிக்க
ஒதுக்குகின்ற பாதகம்மாள் வழியைஇப்
பாராளும் உரிமைஇந் நாட்டார்க்கே
உளதென்னும் பண்பைக்கட் குடிவிலக்கை
அறைகூவு மாண்புசெறி அருட்கடலைக்
குணக்குன்றை அடியாரின் இருதயத்தின்
அணிபெறவீற் றிருந்தருளும் அண்ணலைஇந்
நிலையில்லா அரசியலின் வாதியென்னல்
அறியாமை! அறியாமை! ஆதலினால்
அஞ்சாமல் அம்புலீஇ ஆடவாவே!
அன்பதனால் உலகாளும் ஐயனுயர்
காந்தியினோ டம்புலீஇ ஆடவாவே! அ

இழையாயி ரம்பெற்ற எழிலாடை
பண்டைநாள் ஈன்றுபெரு மிதமடைந்த
இணையில்சீர் சேர்நந்நா டின்றாடை
ஏதுமிலா திரங்கிப்பல் இன்னலுற்றுத்
தழையாடை யாக்கொண்டு தருமநெறி
அறியாது தருசூழுங் கானகத்தில்
தாய்த்திரியும் விலங்குகள்போற் சஞ்சரித்தே
இந்நாளில் தருக்காதி கொண்டுசெருங்
குழையாத பிறநாட்டாடை உடல்மறைக்க
எதிர்பார்த்தல் குற்றமத னாலுயர்ந்த
கோதில்லாக் கதராடை குவலயத்தே
பெருக்குமெனக் கூறுமெழிற் கூர்ஜரம்வாழ்

அழையாமல் அவனிக்கே அருள்புரியும்
அண்ணலினே டம்புலீஇ ஆடவாவே!
அன்பதனல் உலகாளும் ஐயனுயர்
காந்தியினே டம்புலீஇ ஆடவாவே! ௯

இழுக்காக அடிமையெனும் படுகுழியில்
வீழ்த்துவது எழிலாடை கொண்டுதேச
இரும்பொருளைப் பிறநாட்டுக் கனுப்புதலே
ஆதலினுல் இஃதோர்ந்து நமதுமக்கள்
பிழைக்கவழி கதராடை பேணுதலே
ஆகுமெனப் பிறங்கிடவே மொழிந்தபின்னும்
பெருமைமிகு நாட்டிற்காப் பிறபலசெய்
யாவிடினும் பீடுபெறு கதருடுத்தும்
ஒழுக்கமதைக் கொள்ளாதார் மனந்திருந்த
வேண்டுமென ஒப்பற்ற பொருளைநாடி
உறுதவமே செய்கின்ற ஒண்புகழான்!
தண்ணளியான்! ஒன்னலரென் றெவருமில்லான்!
அழுக்காற வாவெகுளி இன்னச்சொல்
இல்லானே டம்புலீஇ ஆடவாவே!
அன்பதனல் உலகாளும் ஐயனுயர்
காந்தியினே டம்புலீஇ ஆடவாவே! ௧0

ஆகச் செய்யுள் ௭0.



# 8. சிற்றிற் பருவம்

குற்றம் புரிந்தாய் நீயென்னக்
கொண்டு நீதித் தலத்திட்டுக்
கூறுவாக்கு மூலமெனக்
கோறு துள்ளம் பெருங்கதையாய்ச்
செற்றம் இன்றி நீமொழிந்த
திருவா சகத்தின் சுருக்கத்தின்
செய்தி தன்னைச் சிறுதகையேன்
செப்ப விழைந்தேன் இத்தமிழில்;
"இற்றை அரசாங் கத்துடனே
இனிய அன்பு கொண்டிருந்த
என்றன் உள்ளம் மாறியதற்
கேற்ற அதனை எல்லோருந்
தெற்றென் றறிய உரைப்ப"னெனுந்
தீரா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! க

"தென்னைப் பிரிக்கா சென்றங்கு
சிறுமை உற்ற இந்தியரைத்
தேற்ற எண்ணிச் செயல்புரிந்து
செகத்திற் பிறந்த எவருமடை

மன்னு உரிமை இந்தியனுய்
வந்த அரிய காரணத்தால்
மறுக்கப் பட்டேன் அதுகொண்டு
மயங்கா தந்த அரசினுக்கே
இன்னுப் பழுதாம் இந்தியரை
இவ்வா றிகழ்தல் எனஇகயந்
தெண்ணி அவரோ டொத்துழைத்தேன்”
என்ன மொழிந்த எம்மானே!
தென்னுர் காந்தி! புத்திரிபாய்
சிறுவா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! ௨

“போயர் அமர்க்குப் படைதிரட்டிப்
பிறங்கக் கொடுத்தேன்! ஜூலுவென்போர்
புரட்சிக் குதவி நனிபுரிந்தேன்!
புகழ்ந்தார் அந்த ஆப்பிரிக்கா
ஆய தீவை அரசாள்வோர்
அறிக்கை அதனுல் அந்நாளில்
அரசப் பிரதி நிதியென்பார்
அளித்தார் பொன்னின் பதக்கமதை
மேய ஜெர்மன் பெரும்போர்க்கு
விரும்பிப் படையைச் சேர்த்தளித்தேன்
விழைந்திவ் வாறு உதவிசெய்தால்
மேன்மை பெறலாம் என்றென்று”

தேயம் மதிக்க உரைசெய்த
செல்வா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! ௲

"நன்று கிடைக்கும் என்றெண்ணி
நானிவ் வாறு உதவிசெய
நாவை யடைக்கும் பெரும்பூட்டாய்
நவிலும் ரௌலட் சட்டமது
மன்றம் ஏறி வந்தந்த
மறத்தைப் போக்க ஓரியக்கம்
வகுக்க வேண்டி யானதுபின்
மாபாஞ் சாலந் தனிலந்தோ!
கொன்று மலையாக் குவித்தபெருங்
கொடிய கொலையுந் தோன்றியதால்!
குருவைக் காக்கத் துருக்கர்க்குக்
கொடுத்த வரக்கைக் காக்காமல்
நின்று விட்டார் மந்த்ரி"யெனுந்
தீரா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! ௨

"இன்ன செய்கை கண்டபினும்
எதிர்க்க உள்ளத் தெண்ணாமல்
எந்தன் உயிரின் துணைவர் பலர்
இயம்பும் மொழியுங் கொள்ளாமல்

பின்னும் ஒத்தே உழைக்கவெனப்
பேசித் தந்த திருத்தத்தைப்
பெரிய தேச சபைமுன்னர்ப்
பெற்றுக் கொளமன் ருடினனப்
பன்னற் கரிய பாஞ்சாலப்
பழிக்கும் முஸ்லீம் குருவுக்கும்
பரிகா ரங்கள் கிடைக்குமெனும்
பண்பைக் கொண்டே" எனமொழிந்த
சென்னி உலகுக் கெனத்திகழுந்
திருவே! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! ௫

"நீள்பாஞ் சாலப் படுகொலைக்கு
நீதி ஏதுங் கண்டிலேன்!
நீக்கம் பெறவும் பெற்றிலாய்
நிற்கின் ருான் ருர்சிலவர்!
மூனுங் காதல் கொடுசிலர்க்கு
முன்னிப் பரிசும் ஈகின்ருர்!
மொழிபொய்த் ததற்கும் ஒன்றுமிலே!
முடித்துக் கொடுத்த சீர்திருத்தம்
வாளா அன்றி மற்றில்லே!
வறுமைப் பிணியால் வாட்டமுறும்
மக்கள் உய்ய வழியில்லே!
மனத்துட் கொண்டேன் இவை"யெனும்புத்

தேளிர் பரவும் திருநாட்டுச்
செல்வா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர் காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! சு

"இந்த்யர் எய்துந் துயர்தன்னை
எடுத்துப் புகல்வோர் எல்லோரும்
ஏதஞ் சாரும் சிறையெய்தி
இன்னல் ஏற்றங் குறைவதையும்
நொந்து துன்பம் அடைவதையும்
நோக்கி அவரோ டொத்துழையா
நுவலற் கரிய கருணைசெறி
நோன்பை மக்கள் எளிதாகச்
சிந்தை கொள்ளத் தந்தனனால்
சீற்றம் இறைபால் என்றனக்குச்
சிறிதும் இல்லை" எனமொழிந்த
செம்மை மிக்க சீர்நம்பி!
செந்தா மரையாள் திகழ்நாட்டுச்
செல்வா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! எ

"ஊன இந்த அரசாட்சி
அடியேன் கொள்ளேன்! அதில்வெறுப்பை
அடைதல் மேலாம் குணமென்ன
அணிந்தேன்! ஆண்மை தனையழிக்கும்

ஈனங் கொண்ட ஆட்சியதை
ஏற்றல் பாபம் எனவுணர்ந்தேன்!
இழிக்கும் தீதோ டுறவாடேன்!
எழிலார் நன்மை பற்றுங்கால்
நானே அடைவேன் எதுவரினும்
நன்கு பொறுப்பேன் துயரையெலாம்
நலிய மாட்டேன் எற்கிவையே
நல்ல கடனே" எனநவின்ற
தேனே ஒழுகு திண்மைசெறி
தீரா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே ௮

"கடமை யாக நான்கொண்ட
காரி யத்தைக் குற்றமெனக்
கணிக்குஞ் சட்டம் தனையறிந்தே
கருதுந் தண்டந் தனையேற்க
அடைந்தேன் ஈண்டச் சட்டமுறை
அதுவே ஒழுங்கென் றகங்கொண்டால்
ஆற்றத் தண்டித் திடுக!வன்றி
அடியேன் செயலை இனிதோர்ந்து
கொடுமை சட்டம் என்னுடைய
கொள்கை சரியென் றறிவிரேல்
கோது பொருந்தும் நும்பதவி
கொள்ளா தின்றே விடுக" வெனத்

திடமாய் நீதி பதிமுனுரை
செல்வா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே! ௬

நியாயம் வகுக்கும் அதிபதியர்
நாள்நிற் பார்த்தே "என்முன்னர்
நின்னை அனைய தருதியுளார்
நின்ற தில்லை! இதுகாறும்
அயாவு னைப்போல் இனிமேலும்
அடையப் போவ தில்லை! யுனை
அறிவேன் நன்றாய் நீயுரைக்கும்
அஹிம்சை ஆதி அறத்தை" யென
வயாவோ டுரைத்தும் பற்பல்புகழ்
வழுத்தப் பெற்றாய் என்றாலுன்
மாட்சி உரைக்க வல்லேனிம்
மதியில் ஏழைச் சிறியேனோ?
தியாக உருவே! அன்புசெறி
தீரா! சிற்றில் சிதையேலே!
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா! சிற்றில் சிதையேலே!

ஆகச் செய்யுள் அ௦



# 9 சிறுபறைப் பருவம்

---

தென்னுப்பி ரிக்காவில் நின்செயற்குத்
துணைநின்ற சீலமிகு கின்ற எங்கள்
திருமலிய அறம்வளர்த்த பலபெரியோர்
அவதரித்த சீர்த்தியுடைத் தமிழ்பி றந்த
தென்னாட்டு நாகப்பன் வள்ளியம்மை
சீர்நாரா யணனிவர்கள் செய்கை தன்னைச்
செகமறியப் பலப்பலகால் செப்பிமகிழ்
உத்தமனே! சிறந்ததமிழ் மொழியில் அந்நாள்
எந்நாடும் எம்மதமும் எம்மொழியும்
எம்மனித ரும்மென்றும் இதயம் ஏந்த
இனிதறத்தை வகுத்தருளும் எந்திருவள்
ளுவர்குறள்கட் கிலக்காகி ஈண்டு வந்த
செந்நாவாய்! உண்மையினில் ஜெகத்குருவே!
சீர்க்காந்தி! சிறுபறை முழக்கி யருளே!
செல்வங்க ரஞ்சந்த்ரர் புத்திரியாய்
திருமகனே! சிறுபறை முழக்கி யருளே! க

சீர்மலியுந் தமிழ்நாட்டில் திருமலியுந்
தனவணிகர் தெருமலிய அறம்வ ளர்க்கும்
சீர்த்திமலி வளப்பாண்டி மண்டலத்தில்
திகழ்கானாக் குடியென்னுஞ் சீர்ப்ப திதனில்

நார்மலியப் பொறைமலிய நல்லுண்மை
தாமலிய நண்ணுமறம் ஆதி யாவும்
நனிமலிய உரைபகர்நாள் "நாட்டன்பு
சிறிதின்றி நண்ணுதார் நாடு நன்றுய்
ஏர்மலியப் பொருளீந்தே இழுக்குடைய
மகவுணவை ஈந்துமகார் வளர்த்தல் தன்னில்
இறந்துபட விடுதல்மேல்" என அன்பால்
உரைவிரித்த எழில்மலியுங் காந்தி என்னுந்
தேர்மலியுந் திருவீதித் தென்னுட்டார்
திருவுளமே! சிறுபறை முழக்கி யருளே!
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரிபாய்
திருமகனே! சிறுபறை முழக்கி யருளே! உ

பொன்புரையுந் திருமேனி பொன்றப்புன்
சிறைபுக்க போதுமொரு துயரும் இன்றிப்
பொருமியழு துளம்நொந்த புண்ணியவித்
திருநாட்டுப் புதல்வர்தமை இனிது நோக்கி
அன்புரையாற் கதர்கதரென் றறைந்தேகி
அணிபெறவீற் றிருந்தருளும் அறக்கொ ழுந்தே
"அடியேனின் இப்பிறப்பின் பயன்கதரைப்
பெருக்குதலே'! ஆகுமெனும் அண்ணல் ஏறே!
"மன்பெரிய பயனடையும் நூல்பயிலல்
அதனினுகான் மாராட்டின் நூலே நூற்றல்
மாண்பெனவே மதிக்கின்றேன்" என்றுரைக்கும்
மாமணியே! மாநாடு வாழ வந்தோய்!

தென்பொதியுந் திருநாட்டிற் றிகழ்காந்திச்
செம்மலே! சிறுபறை முழக்கி யருளே!
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரியாய்
திருமகனே! சிறுபறை முழக்கி யருளே! ௯

ஊனெடுக்கி ஒளிபெருக்கும் உத்தமனென்
றுலகுபுகழ் ஒருவனுளன் உலகில் ஆனல்
உனையன்றி வேறில்லை! உன்னுணவின்
அருமையினை ஒண்புகழாம் ஒளியை ஓர்ந்து
நானடுக்கி நவிலுதற்கு வல்லவனே?
நாப்பலபெற் றுலுமவை நண்ணல் ஆமோ?
நாகரிகம் என்றிந்நாள் நனியாடை
பலசுமந்து நண்ணுமவர் நாண அன்பாய்
வானுடுக்கும் புகழ்கொண்ட மாண்புசெறி
ஒருசிறிய கதருடுத்தும் வள்ள லே! இம்
மண்மதிக்குந் தனிப்பெரிய மகத்சப்தம்
இனிதேற்ற வண்மைமிகு காந்தி மன்னு!
தேனடுக்கும் மலர்ப்பொழில்சூழ் திருப்பழன
நாட்டவனே! சிறுபறை முழக்கி யருளே!
செல்வக்கரஞ்சந்த்ரர் புத்திரியாய்
திருமகனே! சிறுபறை முழக்கி யருளே! ௰

ஐம்பெரிய பாதகத்துள் மதுவருந்தல்
ஒன்றெனவே அறஞ்சொன்ன புலவன் அந்நாள்
அறைந்தவதை மனங்கொண்டே அவ்வினையால்
மக்கள்பலர் அருந்துசெயல் இன்றி அந்தோ!

தம்பமெனத் தெருக்கிடக்கச் சாற்றரிய
இவ்விழிவாம் தன்மையால் தார மோடு
தனையரெலாம் சரித்திரத்தை நனியேற்றுத்
தளர்ந்துபல தாங்கொணுத் துன்பம் எய்தி
வெம்பவினை உள்ளமதில் விரைந்தெணி இந்
நாட்டறிவு மேவியிட வேண்டு மாணல்
விரும்பவொணு இக்கள்ளை விட்டுவிட
வேண்டுமென விதியினெடு சேர்த்த மைத்த
செம்பதுமத் திருமகிழச் செயல்புரிகாந்
திச்செம்மல்! சிறுபறை முழக்கி யருளே!
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரிபாய்
திருமகனே! சிறுபறை முழக்கி யருளே! ௭

" தக்கதகா தனவோர்ந்து கருமத்தின்
வழிச்சென்று தாரணியெங் நாளும் வாழத்
தருகடமை தனையாற்றிச் சாற்றரிய
இன்பநிலை சாருதலே தலத்து வந்த
மக்களுயர் கடனதற்கு மாசற்ற
அறிவுதரு மாண்புடைக் கல்வி வேண்டும்
வாழுமுறை பயிற்ருத சிலமொரு
சிறிதுமிலா வல்லடிமை கொளப்ப யிற்றும்
மிக்கவர்வே றில்லையென விளம்புதகை
மேவாமேல் வீடடைய அறிவி யாத
வெறுங்கல்வி பயனில்லை! வேண்டாமப்
பள்ளிதனை விட்டின்னே விலகும்" என்ற

செக்காரும் பொன்மேனிச் செகம்புகழ்காந்
திப்பெரிய! சிறுபறை முழக்கி யருளே!
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரிபாய்
திருமகனே! சிறுபறை முழக்கி யருளே! ௬

வேறு.

சட்டச பைகளிற் சார்வதிற் பயனில்லை!
சார்ந்தவண் செய்வதெவன்?
சான்றோர் அங்கில்லை! சனநலம் எனச்சில
சாதித் திடினுமவர்
இட்டப் படிசெய எல்லா உரிமையும்
ஏற்றிருக் கும்பொழுது
என்செய வல்லீர்? அங்குசென் றந்தோ!
ஏனிவ் இடர்ப்பாடு!
திட்டம் உடன்பிற செயல்புரி வதில்நாள்
செலவிட் டால்தேசம்
செழிக்கும் பயன்தரு செயல்செயும்! வீணே
சென்றுயர் குன்றதனில்
மூட்டிய குரீயென மொய்ம்பழி யீரென
முழக்குக சிறுபறையே!
மோகன தாஸ்கரம் சந்திர காந்தி!
முழக்குக சிறுபறையே! ௭

பாரிற் பாதகத் தொழிலெது என்னின்
பள்ளியிற் பயில்சிறிய
பச்சைக் குழந்தையும் பகரும் பொருளைப்
பகர்கொளை அடிப்பதுபோல்

நேரிற் பறித்துண் நியாய வாதியாம்
நெறியில் தொழிலென்றே
நின்றவ் வினையால் பாதகப் பொய்க்கு
நெஞ்சத் தச்சமிலா
நாரில் மக்கள் நலம்பெற் றுய்ய
நாடு செழித்தோங்க
நல்லன மலிய அல்லன நலிய
நல்லறி வெங்குமிக
மூரிப் பெரிய முளரிக் கையால்
முழக்குக சிறுபறையே!
மோகன தாஸ்காம் சந்திரகாந்தி!
முழக்குக சிறுபறையே! அ

பண்டிந் நாட்டிற் பஞ்சா யத்தெனப்
பண்புள மக்கள் தமைப்
பார்த்தூர் தோறும் அமைத்தனர் அவரும்
பாங்காய் வழக்குகளை
விண்டற நெறியே விளக்கினர் அன்னார்
மிகுதுலை நாவன்ன
மேதகு நடுநிலை தவறு வாய்மையர்!
மேவுமிர் நான்கிலையை
மண்டலம் அறியும்! வாயாற் கூறினும்
மாசே மாசெனவே
மதிமிக உடைய வள்ளால்! கருணை
மாபெரு வாரிதியை

மொண்டே பொழியும் மொய்ம்புடை மழையே!
முழக்குக சிறுபறையே!
மோகன தாஸ்கரம் சந்திர காந்தி!
முழக்குக சிறுபறையே! க

கதியடை பவர்போல் களிப்பொடு வீணே
கண்ணியம் எனக்கொடுக்கும்
கருதின பொருளேதும் இல்லா எழுத்தின்
கணமாம் பட்டமதை
நிதியென ஏற்பதில் பயனேதும் இல்லை!
நிந்தனை ஓடும்மை
நினைப்பரும் இடரில் அழுத்திடும் அவரொடு
நேர்ந்துற வாடிடுதல்
மதியல! மான வாழ்க்கையை எண்ணி
வாழுதல் மேலன்றி
மானந் துரந்தும் பட்டந் தாங்குதல்
மாபல! எனுமுயர்ந்த
முதுபுல வோர்கள் மொழிகளை ஓதி
முழக்குக சிறுபறையே!
மோகன தாஸ்கரம் சந்திர காந்தி!
முழக்குக சிறுபறையே! ௧௦

ஆகச் செய்யுள் ௧௦.



# 10. சிறுதேர்ப் பருவம்

இந்துமுசல் மான்வேற்று மையென்னுங்
　　கொடியபிணி இறந்துபட் டோட இந்த
இணையில்சீர்த் திருநாட்டில் பிறநாட்டின்
　　ஆடையெலாம் எரிக்கிரை யதாகி வீழப்
புந்தியிலாக் கள்ளருந்தும் புன்செய்கை
　　அகன்ருேடப் பிள்ளையை அடிமை ஆக்கும்
பெரும் பள்ளிக் கூடங்கள் பெருமையிழந்
　　தொழியநெறி பேசா வழக்கு மன்றம்
முந்தியழி வெய்தியிட மொய்சட்ட
　　சபைவைத்த ே ாகம் பறந்து ாள
மொய்ம்போடு பொருளுமிலா வீண்பட்ட
　　ஆசைகள் மோதுபெற் ருேடி ஒழியச்
சிந்தைநிறை அறியாமை சிதறுண்டு
　　சென்றுளச் சிறுதேர் உருட்டி அருளே!
செகத்திலுயர் தனிக்காந்தி! திகிரிபுனை
　　செங்கையால் சிறுதோர் உருட்டி அருளே　　க

இந்துமுக மதியரெனும் இருவேறு
　　மதத்திலுறை யாவரும் ஒன்று பட்டே
எதில்லார் தந்தீதை மோதிஉயர்
　　வெய்தாமல் இவர்க்குளே மாறு பட்டால்

வந்தபெருந் துன்பங்கள் மாளாவே
　　னும் உண்மை மனத்துளே கொண்டே நாளும்
மாருமல் இவ்வொற்று மைநாடி
　　மாற்றமுரை வள்ளலே! மாண்கு ணத்தோய்!
எந்தஉயி ரும்நோவ இறையும்பொ
　　றுக்காத இணையிலாக் கருணை மூர்த்தி!
எதுவரினும் அஞ்சாத இருமலையே!
　　பொறுமையாம் எழிலுடைத் தீஞ்செ ழுந்தேன்
சிந்துதிரு வாய்ச்செம்மல்! செயல்வல்ல
　　சீர்க்காந்தி! சிறுதேர் உருட்டி அருளே!
செகத்திலுயர் தனிக்காந்தி! திகிரிபுனை
　　செங்கையால்! சிறுதேர் உருட்டி அருளே! ௨

வள்ளுவரும் நீயும்பல் வகையினுல்
　　ஒப்பென்ன வகுக்கலாம் அந்த ஞான
வள்ளலுயர் நெய்தொழிலின் மாண்பறிந்து
　　கைக்கொண்டார் நீயுமத் தொழிலை ஏற்ருய்
எள்ளுகுணம் இல்லாத மனைவியுளார்
　　அவரினும் இம்மியுந் தாழ்வுருத
எழில்மனையை நீயுடையாய் அவர்நாள்
　　மக்களுய ஏதமிலா அறமு ரைத்தார்
தள்ளரிய அவ்வறத்தைத் தாழாமல்
　　இற்றைநாட் தகவறிந் தினிது நீயும்
சாற்றுகின்ருய் ஆதலினுல் தகுதியுடை
　　நீஎங்கள் தண்மையோ டினிமை சாரும்

தெள்ளுதமிழ் வள்ளுவனர் திருவாவென்
றியம்பிடலாம் சிறுதேர் உருட்டி அருளே!
செகத்திலுயர் தனிக்காந்தி! திகிரிபுனே
செங்கையால் சிறுதேர் உருட்டி அருளே! ரு

நின்னுடைய தொழிலெதுவென் றறைந்தபொழு
தன்னால்!நீ நெய்தல்சிவ சாய மென்றும்
நீஎந்தக் குலமென்ன வினவகுடி
யானவனன் என்றுமே நேர்மை யோடு
சொன்னமொழி கண்டும்வீண் சோம்பேறி
ஆனபலர் தூய்மைசேர் ஞானம் இன்றித்
தொழிலொன்றை ஆற்றித்தொல் பிறப்பதனல்
சாதிசொலும் தூசுநீங் கிடுவ தென்றே?
என்னபொருள் ஒன்றிபற்றி மற்றென்றன்
பெயர்குறித்தற் கென்பதை அறிந்தி லேனல்
ஏனிந்த அறியாமை! இதுசாக
எழிலிறைவன் என்றுளங் கொள்ளு வானே!
சென்னிமிசை நின்சரண கமலமலர்
சேர்த்தினேஎன் சிறுதேர் உருட்டி அருளே!
செகத்திலுயர் தனிக்காந்தி! திகிரிபுனே
செங்கையால் சிறுதேர் உருட்டி அருளே ௬

பொன்மனக்கத் திருவீதி புகழ்மணக்க
வானளவும் பொருவிலா அறங்கள் எல்லாம்
புவிமணக்கச் சைவநெறி பொலிவெய்தி
மிகமணக்கப் புகலரும் சீர்த்தி போதம்

நன்மணக்க வாழ்ந்தந்நாள் நற்றனவை
　　சியரெனப்பேர் நவிலவே இனிது றைந்த
நல்லதொரு சமூகத்தின் நவைகளைந்து
　　பழம்பெருமை நாட்டவே ஞாலம் வந்த
என்மணக்க நெறிமணக்கும் எழிற்காரைத்
　　தனவைசிய ஊழியர் சங்கம் அன்போ
டினிதளித்த பத்திரத்தில் நின்பெயரை
　　உளங்கொண்டால் எய்தலாம் சாந்தம் என்று
தென்மணக்க உரைத்தமொழி திறம்பாத
　　வாய்மையே! சிறுதேர் உருட்டி அருளே!
செகத்திலுயர் தனிக்காந்தி கிரிபுனே
　　செங்கையால் சிறுதேர் உருட்டி அருளே! ௩

வேறு

பான்மதி அரவஞ் சூடிய உமையாள்
　　பதிபர மேசுரனும்
பச்சை நிறந்திகழ் லெட்சுமி கொழுநன்
　　பாற்கடல் உறைவோனும்
மான்விழி மங்கை வெண்டா மரையாள்
　　மகிழ்நனும் அசுரர்களின்
வாழ்வு தொலைத்த வள்ளிம ணாள
　　வள்ளலும் வானாளும்
தேன்சொரி தருவின் இனிதுறை செல்வத்
　　தேவர்க் கிறையவனும்
தினமும் விரும்பும் திருவாழ் நாட்டில்
　　செனித்துப் புகழ் படைத்தோய்!

ஊன்வழி அறியா உண்மைக் காந்தி!
உருட்டுக சிறுதேரே!
ஒப்புயர் வில்லா உத்தமர் ஏறே!
உருட்டுக சிறுதேரே! ௬

இந்நில மாந்தர் இன்புற் றுயா
எழில்மட வாரெல்லாம்
ஏந்தக் கற்பை ஏழை அடிமை
எவ்வுல கத்துமின்றித்
தன்னா சோங்கித் தாரணி வாழத்
தருக்கா தியாவும்
சாகத் தீமைகள் சட்டென் றழியத்
தருமமெ லாம்வளரப்
பன்னரு போர்த்தொழில் பறக்கக் கருணைப்
பார்புகழ் அமர்வினையே
படர்ந்திஞ் ஞாலம் பரிசுத் தம்பெறப்
பார்வை புரிந்தருளி
ஒன்னலர் இல்லாய்! ஊனமில் காந்தி!
உருட்டுக சிறுதேரே!
ஒப்புயர் வில்லா உத்தமர் ஏறே!
உருட்டுக சிறுதேரே! எ

முழுதுல கினுநின் மொய்ம் பறியாதார்
முன்னினி ராரென்றே
மொழிவது சிறிதும் மிகையிலை அறிஞர்
மொழிவழி ஒழுகியுனைத்

தொழுகுவர் உணர்வில் துரிசு பொருந்தும்
தொல்வினை உடையாரே
சூடா துன்னடி வேறாய் வீழ்வர்
தோமறு நல்லோரின்
வழுவறு மனங்கள் மோகிக் குந்நலம்
வாய்த்ததை ெகொண்டுனக்கு
வழுத்தினர் போலும் மோகனன் என்னும்
மாண்புத் திருநாமம்
ஒழுகுதல் கல்வி ஒருங்குடை காந்தி!
உருட்டுக சிறுதேரே!
ஒப்புயர் வில்லா உத்தமர் ஏறே!
உருட்டுக சிறுதேரே! அ

"அன்னை எனினும் அத்தனே ஆயினும்
அறந்தவிர் ஆறுரைத்தால்
அதனைக் கடந்து நிறங்காத் துயர்தல்
அணியுயர் மாந்தரவர்க்
கென்னைப் பெற்றோர் இழிதொழில் ஒன்றை
இயற்றென் றியம்புவரேல்
ஏற்கா தவர்மொழி தன்னைத் தள்ளி
என்கடன் செய்வ"னென
உன்னுயிர் மகற்கு நீசிறை யுறுநாள்
ஓலைத் தூக்குவிட்ட
உண்மை திண்மை உறுதி சாந்தம்
ஓங்கிய புகழ்மிக்க

உன்னைத் தொழுதேன் ஒண்டவ காந்தி!
உருட்டுக சிறுதேரே!
ஒப்புயர் வில்லா உத்தமர் ஏறே!
உருட்டுக சிறுதேரே! க

வேறு

ஏரரும் புகழ்க்காந்தி! யாங்களுயச் சிறுதேரை
இனிதே உருட்டி அருள்க!
இணையில்லாக் கஸ்தூரி எழிற்கணவ! சிறுதேரை
இனிதே உருட்டி அருள்க!
சீராருந் தேவதாஸ் திருத்தந்தாய்! சிறுதேரைச்
சீக்கிரம் உருட்டி அருள்க
செல்வமலி பாரதத்தாய் திருமகனே! சிறுதேரைச்
சீக்கிரம் உருட்டி அருள்க
நாராரும் நன்மக்கள் நாயகனே! சிறுதேரை
நன்ருய் உருட்டி அருள்க
நன்மைக்கு நண்புடையாய்! நாடறியச் சிறுதேரை
நன்ருய் உருட்டி அருள்க!
பாராரும் பண்புநிறை பாவலனே! சிறுதேரைப்
பாங்காய் உருட்டி அருள்க!
பழவறத்தை உலகிற்குப் பகரொர்தாய்! சிறுதேரைப்
பாங்காய் உருட்டி அருள்க! க௦

ஆகச் செய்யுள் க௦௦
முற்றுப் பெற்றது.

## வாழி.

காந்திஎனும் கருணைபொழி கவின்மேகம்
வாழ்க!உல கத்து வாழும்

மாந்தரொடு பல்லுயிரும் வாழ்க!அறம்
யாவும்இனி வாழ்க! வாழ்க!

வாய்ந்தபுகழ் கொண்டன்று வாழ்ந்தபெரும்
பாரதத்தாய் வாழ்க! நாங்கள்

ஏந்துதமிழ் வாழ்ந்திடுக! எழிலாரும்
அறவோர்கள் என்றும் வாழ்க!

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

## செய்யுள் முதற்குறிப் பகராதி.

